*Kumaraṉ*

*Āram 16, muttu 22*

*January 12, 1939*

Record no. 313

REG NO M. 1823. KUMARAN WEEKLY. TELEPHONE டெலிபோன் 40

சந்தா விவரம்.
உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0
சிலோன் ரூ. 6-0-0
பர்மா, மலாய் முதலிய வெளிநாடு
ஷ 1-க்கு ரூ. 7-0-0

# குமரன்

விளம்பரம்.
நோட்டீஸ், கோர்ட் விளம்பரம் முதலியவைகளுக்கு இஞ்சு ஒன்றுக்கு ரூ. 2-0-0
வியாபார சம்பந்தமானது ரூ. 0-12-0
ஒப்பந்த விளம்பரத்துக்கு மானேஜருக் கெழுதவும்.

வியாழன்தோறும் வெளிவரும் — மாதப் பதிப்பும் சேர்ந்தது. — PUBLISHED EVERY THURSDAY.

ஆரம் 16. காரைக்குடி, வெகுதானிய-ஷ மார்கழி-மீ 28-உ (12—1—39) முத்து 22.

## தமிழ்த் தென்றல்

### அவல் நாடகம்

அரண்மனை வாசல். காவலாளிகள் பலர் உருவிய கத்தியுடன் காவல் புரிகின்றனர். அங்கே பல தேசத்து மன்னர்கள் அற்றம் பார்த்து நிற்கின்றனர். அரண்மனையின் உள்ளே இருக்கும் மன்னனது பேட்டி காண விழைந்து காத்துக் கிடக்கின்ற மன்னர் கூட்டம் அரண்மனைக் கடைவாயிலில் மொய்த்து நிற்கிறது. இக் கூட்டத்தினிடையே ஒரு கிழவர் வயிறும் முதுகும் ஒட்டி யுலர்ந்து வாடி நிற்கின்றார். பண்டைப் பழங் கந்தையால் அவரது உடல் மூடப்பட்டிருக்கிறது. காவலாளியை நோக்கி இரந்து வேண்டுகின்றார். ஆயிரம் மன்னர்களின் வேண்டுதலுக்கு அசையாத காவலாளர், தரித்திர சொரூபமாக நிற்கும் பரிதாபகரமான கிழவருக்கு என்ன சொல்கின்றார்? "அறிவுற்ற உலகமெல்லாம் போற்றவும், பணியாதவர் எமலோகம் புகவும் அரசாளுகின்ற கண்ணபிரானின் தன்மை யென்ன? உனது பரிதாபக் காட்சி என்ன? இற்றுப்போன ஆயிரம் துவாரமுள்ள துணியைக் கட்டியிருக்கிற ஏழைப் பார்ப்பான் நீ. உனக்குச் சிறிதுகூடப் பகுத்தறிவில்லை போலும்! வயது மூத்தாலும் அறிவு முதிர்ச்சிபெறாது போய்விட்டாய்" என்று ஏளனம் செய்கின்றனர்.

வகுத்தபல் உலகும் போற்ற
மாற்றலர் கூற்றூர்மேவச்
செகுத்தர சாளுங் கண்ணச்
செம்மலெங் கேநீ யெங்கே
இகுத்தபல் துவாரக் கந்தை
ஏழைப்பார்ப் பானே சற்றும்
பகுத்தறிந் திடலாற் ருய்கோல்
பயனில்மூப் படைந்தாய் போலும்.

* * *

மன்னர்கட்கு வழிவிடாத வாயில் ஏழைக்கு வழி விடுமா என்று காவற்காரர் கருதியதில் பிழையுண்டா? நாள்தோறும் ஆயிரக்கணக்கானவர் சென்று வெளி வருகின்றனர். ஆனால் அவர்களில் இப்படிப்பட்ட தரித்திரக் கிழவர் யாராவது இதுவரை செல்லவில்லையே! இது ஒரு வேடிக்கையாக அவர்கட்கிருந்ததில் ஐயமென்ன? காவலாளர் இந்தத் தொண்டு கிழவரைக் கண்டு கேலி செய்வதைப் பார்த்து பக்கத்திலிருந்தோர் "பெரிய அறிவாளியாகத் தோன்றுகிறார்; உள்ளே போய்ச் சொல்லுங்கள்; நடப்பது நடக்கட்டும்" என்றார். சென்றனர். உள்ளே உல்லாசமாகப் பொழுது போக்கும் கண்ணபிரானைக் கண்டனர். கிழவர் செய்தி சொல்கின்றனர்.

ஆதிநாள் ஐய நின்னோடு
அருங்கலை கற்று ளானும்
போதவும் சிறந்த நட்புப்
பூண்டுகொண் டவனும் கந்தை
மேதகக் கொண்ட நீரான்
மெய்ம்மறை யவர் குலத்தான்
கோதறு குணத்தின் மிக்கான்
குசேலனென் றியம்பினுன் பேர்

என்று உரைத்தனர். இவ்வுரை கேட்ட மாயக்கண்ணன் அழைத்து வா என்று ஆணையிட்டார். வருகிறார் குசேலக் கிழவர். வரவேற்றுப் பொன்னாசனத்தில் இருத்தி வாழ்த்தி வணங்கி நிற்கின்றான். அடியார்க்கு எளிமை புரிந்து ஏற்றும் தன்மையைப் புலவர் சிறப்பிக்கின்றார்.

* * *

வழிநடந் திளைத்தவே இம்
மலரடி இரண்டும் என்று
கழிமகிழ் சிறப்ப மெல்ல
வருடினான் கமலக் கண்ணன்
பழியில்பல் லுபசா ரங்கள்
பண்ணவும் தெரியா னாகி
ஒழிவறு தவக் குசேலன்
ஒன்றும் பேசா திருந்தான்

கண்ணனே கடவுள் என்று கருதி அக்கடவுளைக் கண்ணாரக் கண்டு களிப்பில் கரை தெரியாதிருக்கிற குசேலரின் கால்களைப் பிடித்துத் தடவிக் கொடுத்துக்கொண்டு, "வழி நடந்து இளைத்துப் போயினவே இந்த மலர்ப் பாதம்" என்று கூறினால் பக்திக்கடலில் எல்லைகாணாது மிதக்கும் குசேலர் என் செய்வார்? ஒன்றும் பேசாதிருந்தார்.

* * *

விடுகிறானா கண்ணன்! என்னைப் பார்க்க நீ வந்தால் சும்மா வருவாயா? உன் மனைவி ஏதாவது பலகாரம் கொடுத்துவிடாம லிருப்பாளா? எங்கே எடு என்று நெருக்குகிறான். குசேலர் என்ன செய்வார்? கல்லானது அரண்மனையும் செல்வமும் அளவிட முடியாதனவா யிருக்கின்றன. தான் என்ன கொண்டுவர முடியும்? கொண்டு வந்திருந்தால்தான் எவ்வளவு நயமாக அது இருக்கும்? அதனை எப்படி எடுத்து எப்படி உலகளந்த பெருமாளிடம் கொடுப்பது? வெட்கப்படுகிறார் குசேலர். கண்ணன் விடவில்லை. சுற்றுமுற்றும் தடவி ஒரு சிறிய முடிச்சை எடுத்தார். குற்றம் முழுமையும் வறுமையிற் செம்மையான வாழ்வினால் கடந்த குசேலரின் தூய உடலில் போர்த்துப் பல ஆண்டுகளைப் பார்த்த பழய கந்தையின் தலைப்பில் ஒரு முடிச்சைக் கண்ணன் கண்டுபிடித்தான். கற்பரசிகளெல்லாம் போற்றி வணங்கும் தெய்வமான சுசீலா முடிந்து வைத்த முடிச்சு அது.

நடவல தீர்ந்தவன்மெய் போர்த்த
நாள்பல கண்ட கந்தைப்
படர்தலைச் சுருக்கி வாங்கிப்
பாங்குவைத் தினிதின் ஆய்ந்து
விடலருங் கற்பு வாய்த்த
மின்னனார் வணங்கும் தெய்வம்
திடமுற முடிந்து வைத்த
சிறுபொதி கண்டு கொண்டான்.

* * *

முடிச்சை அவிழ்த்தான். அதனுள்ளிருந்த அவலை யெடுத்தான். அது நெல்லரிசியிலிருந்து செய்தது கூட அன்று. எளிய புல்லரிசியாலாக்கப் பட்டது. எதுவானா லென்ன? அன்பிலல்லவா அதுசெய்யப்பட்டிருக்கிறது? அள்ளினான் கண்ண பெருமான்! இது சொல்ல முடியாத சுவையுடையதாக இருக்கிறது; தேவர்கட்கும் இது அருமையானது; புத்தப் புதிது; விலைக்கு வாங்கினால் இப்படி யிருக்குமா? என்று சொல்லிக் கொண்டே ஒரு பிடி அவலை மென்று மென்று தின்றான். அவன் யார்? உறியிலிருந்த வெண்ணெயை வாரி வாரி உண்ட கமலக் கண்ணன்.

செறிதரு சுவைத்தீ தென்றும்
தேவர்க்கும் அரிய தாகும்
அறிதரு விருப்பின் இல்லின்
அமைத்ததே பழைது மன்று
குறிதரு விலைப்பாற் சென்று
கோடலிவ் வளத்த தோவென்று
உறியவெண் வாரி உண்டோன்
ஒருபிடி அவல் தின்றானே.

* * *

இந்த அவலில் ஒன்றுகூட முனை முறியவில்லை; ஒன்றாவது முழு அரிசியாகவுமில்லை; பட்டகை எட்டுகாள் மணக்கும்; வாயிலே போட்டால் வெல்லம் வேண்டாமலே இனிக்கிற து- என்று கூறிக்கொண்டே மற்றொரு

(2-ம் பக்கம் பார்க்க)

## ரயில் வண்டிப் போக்கு வரத்து

### காரைக்குடியிலிருந்து திருச்சிக்கு

| வண்டிகள் விபரம். | வரும் நேரம் | புறப் படும் நேரம் |
|---|---|---|
| நிர். 32. பாசஞ்சர். | .... | 6–45 |
| நிர். 68. ,, ... | 9–53 | 10–3 |
| நிர். 30. ,, ... | 13–56 | 14–6 |
| நிர். 2. இண்டோ சிலோன் எக்ஸ்பிரஸ் | 16–22 | 16-32 |
| நிர். 34. பாசஞ்சர் | 18–45 | ... |
| நிர். 26. தனுஷ்கோடி பாஸ்ட் பாசஞ்சர் | 20–27 | 20–36 |
| நிர். 8. ,, | 0–48 | 0–58 |

### காரைக்குடியிலிருந்து மானுமதுரைக்கு

| வண்டிகளின் விபரம். | வரும் நேரம் | புறப் படும் நேரம் |
|---|---|---|
| நிர். 25. தனுஷ்கோடி பாஸ்ட் பாசஞ்சர் | 6–9 | 6–15 |
| நிர். 1. இண்டோ சிலோன் எக்ஸ்பிரஸ் | 9–50 | 10–1 |
| நிர். 67. பாசஞ்சர் | 13–2 | ... |
| நிர். 33. ,, ... | ... | 14–5 |
| நிர். 29. ,, ... | 15–53 | 16–24 |
| நிர். 31. பாசஞ்சர் | 20–4 | 20–35 |
| நிர். 7. தனுஷ்கோடி பாஸ்ட் பாசஞ்சர் | 0–44 | 0–50 |

33 நிர். பாசஞ்சரும், 29 நிர் பாசஞ்சரும் நேராக மதுரை ஜங்ஷனுக்குப் போகின்றன.

### "தேவகோட்டை ரோடு"

காரைக்குடிக்கடுத்த தேவகோட்டை. ரோட்டிலுள்ள ஷ்டேஷனில் இருந்து

### மானுமதுரைக்கு

| வண்டிகள் விபரம். | புறப் படும் நேரம் |
|---|---|
| நிர். 25 தனுஷ்கோடி பாஸ்ட் பாசஞ்சர் | 6–25 |
| நிர். 1. இண்டோ சிலோன் எக்ஸ்பிரஸ் | 10—9 |
| நிர். 33 பாசஞ்சர் ... | 14–13 |
| நிர். 29 ,, ... | 16–32 |
| நிர். 31 ,, ... | 20–43 |
| நிர். 7 தனுஷ்கோடிபாஸ்ட் பாசஞ்சர் | ... |

### திருச்சிக்கு

| வண்டிகள் விபரம். | புறப் படும் நேரம். |
|---|---|
| நிர். 68 பாசஞ்சர் | 9—42 |
| நிர். 30 ,, ... | 13–49 |
| நிர். 2 இண்டோ சிலோன் எக்ஸ்பிரஸ் ... | 16–14 |
| நிர். 34 பாசஞ்சர் ... | 18–32 |
| நிர். 26 தனுஷ்கோடி பாஸ்ட் பாசஞ்சர் | 20–16 |
| நிர். 8 ,, ... | ... |

---

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

பிடி அவலே யுண்டான். அப்படி உண்டவன் யார்? இந்த உலகையுண்டு ருசி பார்த்த கிருஷ்ண பரமாத்மா!

முன்னுமிவ் வவலோன் றேனும்
முவனைமுறிந் ததுவு மின்று
பன்னுமுட் டையுமின் ருகும்
பட்டவங் கையு மணக்கும்
கொன்னும்வாய் செறிப்பின் அம்ம
குளமும்வேண் டுவதின் றென்ன
உன்னுபல் உலகு முண்டோன்
ஒருபிடி அவல் தின்றனே.

S. M.

## சென்னை ரேடியோ

(ஜனவரி 12உ முதல் 15உ வரை)

[மீடியம் வேவ்லெங்த் 211 மீட்டர்கள்
* இக் குறியிட்டவை 60.6 மீட்டர்கள்]

### வியாழன் 12உ

மாலை
4-00 குழந்தைகளுக்கு
5-00 கிராமபோன் ரிகார்டுகள்
5-30 ஸ்ரீ கே. ஹரிஹர ஐயர் வாய்ப்பாட்டு
6-00 குமாரி சுசிலா ஆனந்தராவ் வீடை
*6-00 காட்டுப்புறப் பாட்டுக்கள்
*6-05 நடப்பு விலைவாசிகள்
*6-10 "நிலத்தை வளம்படுத்தல்"—தமிழ் பிரசங்கம்
*6-20 வாத்திய கானங்கள்
6-30 வாலி வதைப்படலம்"—அ. இ. ரே. நடிகர்கள்
6-45 ஸ்ரீ டி. கேசவன் வாய்ப்பாட்டு
7-30 குமாரி சுலோசனா வாய்ப்பாட்டு
8-00 அ. இ. ரே. வாத்தியக் கோஷ்டி
8-15 முடிகொண்டான் ஸ்ரீ சபாபதி ஐயர் வாய்ப்பாட்டு
9-15 "மகாபலி புரம்"—ஸ்ரீ பி. சம்பந்த முதலியார் (ஆங்கில பிரசங்கம்)
*9-30 அ. இ. ரே வித்வான் ஜலதரங்கம்
*9-45 முடிகொண்டான் ஸ்ரீ சபாபதி ஐயர் வாய்ப்பாட்டு

### வெள்ளி 13உ

மாலை
4-00 குழந்தைகளுக்கு
5-00 ஹம்சவேணி சகோதரிகள்: வாய்ப்பாட்டு
6-00 பாலூர் ஸ்ரீ வெங்கட் ராமஐயர் வீடை
*6-00 தெலுங்கு சாகித்யங்கள்: நந்தூரி ஸ்ரீபால சூர்ய ராவ்
*6-05 நடப்பு விலைவாசிகள்
*6-10 குமாரி சாரதாவும் ஸ்ரீ பாலசூர்யாராவும் இசைப்பாட்டுகள்
6-30 பெண்களுக்கு
7-00 அ. இ. ரே. வாத்தியக் கோஷ்டி
7-15 "இரைச்சல்—தமிழ் பிரசங்கம்— "மௌனர்"
7-30 "திருப்பாவை" பஜனை
8-00 வரகூர் ஸ்ரீ முத்துசாமி ஐயர் பிடில்
9-30 ஸ்ரீ பி. வி. நாகராஜன்: புல்லாங்குழல்

### சனி 14உ

மாலை
5-00 ஸ்ரீ கே. சுப்ரமண்யம் நாகசுரம்
6-00 ஸ்ரீ வி. வெங்கடராம ஐயர் வாய்ப்பாட்டு
*6-00 பாடல்கள்
*6-05 நடப்பு விலைவாசிகள்
*6-10 மாட்டுக்குவரும் வியாதிகள்—தமிழ் பிரசங்கம்
*6-20 கம்ப ராமாயணம்

6-30 "பொங்கல் விருந்து"—தமிழ் ஹாஸ்ய நாடகம்—அ. இ. ரே. நடிகர்கள்
7-00 அ. இ. ரே. வாத்தியக் கோஷ்டி
7-30 தேசமங்கலம் ஸ்ரீ சுப்ரமண்ய ஐயர் வீணை
9-15 "வீணையின் ஒலித் தத்துவம்" ஸர். வி. வி. ராமன் ஆங்கிலப் பிரசங்கம்
*9-30 புதுக்கோட்டை ஸ்ரீ சுப்ரமண்ய ஐயர் புல்லாங்குழல்
*9-50 ஸ்ரீ கே. சூர்யநாராயண ராவ் வாய்ப்பாட்டு

### ஞாயிறு 15உ

மாலை
5-00 சாத்தூர் ஸ்ரீ எஸ். கிருஷ்ண ஐயங்கார் வாய்ப்பாட்டு
5-45 "ட்ராம் கண்டக்டரைப் பேட்டி கண்ட விவரம்" ஸ்ரீ வா. ரா. தமிழில் பேசுவார்
6-00 "பொங்கலோ பொங்கல்"—தமிழில் ஒரு விசேஷ நிகழ்ச்சி
6-10 "மாட்டுப் பொங்கல்"—டாக்டர் வி. ராகவன் தமிழில் பேசுவார்
6-40 சாத்தூர் ஸ்ரீ எஸ். கிருஷ்ண ஐயங்கார் வாய்ப்பாட்டு
7-25 அ. இ. ரே. வித்வான்கள் பஜனை
7-35 ஸ்ரீமதி சுந்தரக் காமாக்ஷி வாய்ப்பாட்டு
8-45 ஸ்ரீ என். வி. கிருஷ்ணராவ் புல்லாங்குழல்
9-30 ஸ்ரீமதி சுந்தரக் காமாக்ஷி வாய்ப்பாட்டு
10-00 ஸ்ரீ என். வி. கிருஷ்ணராவ் புல்லாங்குழல்

[குறிப்பு:—தினமும் இரவு 9 மணிக்கு வர்த்தமானமும் வானிலை அறிக்கையும். 10-30க்கு நிகழ்ச்சிகள் முடிவடையும்]

### வியாபார வர்த்தமானம்

தினமும் (ஞாயிற்றுக்கிழமை தவிர) பம்பாய் ரேடியோ நிலையத்திலிருந்து பகல் 12-55 மணிக்கு நடப்பு விலைவாசிகளும் இரவு 7-30 மணிக்கு வியாபார வர்த்தமானமும் அறிவிக்கப்படும்.

### ரேடியோ லைசென்ஸ்

ரேடியோ லைசென்ஸைப் புதுப்பிக்க 10 ரூ. கட்டணம் விதிக்கப்பட்டு வந்தது 1937ல் 8 ரூபாயாகக் குறைக்கப்பட்டது. இப்பொழுது 9 ரூபாயாக உயர்த்தப்பட்டிருக்கிறது. 1939 ஜனவரியிலிருந்து இந்தப் புது விகிதம் அமுலுக்கு வருகிறது.



## கப்பல் செய்திகள்

### நாகபட்டினத்திற்கும் பினாங்குக்கும்

(ஏஜெண்டிடமிருந்து)

வருதல்

கப்பல்கள், மலாய் நாட்டிலிருந்து நாகபட்டணத்துக்கு வரும் தேதி வருமாறு:—

| | |
|---|---|
| ரஜுலா 8478 டன் | 19-1—39 |
| ரோனா 8602 டன் | 2—2—39 |
| தலாம்பா 8018 டன் | 16—2—39 |

புறப்படுதல்

கப்பல்கள் நாகபட்டணத்திலிருந்து மலாய் நாட்டுக்குப் புறப்படும் விவரம் வருமாறு:—

| | |
|---|---|
| ரோனா 8602 டன் | 14—1—39 |
| தலாம்பா 8018 டன் | 28—1—39 |
| ரஜுலா 8478 டன் | 11—2—39 |

### பிரஞ்சு மெயில்

புதுச்சேரியிலிருந்து சிங்கப்பூர், சைகோன் புறப்படும் கப்பல்கள்:-

| | |
|---|---|
| ஸ்பெங்ஸ் 15000 டன் | 16—1-39 |
| ஆந்திரே லெபோன் 20000 டன் | 13—2–39 |

பிரெஞ்சு-மெயில் விவரங்களுக்கு:
H. B. ஹுசேன் & சன்ஸ்,
கப்பல் ஏஜண்டுகள், புதுச்சேரி.

### P. & O. மெயில்

கொழும்பிலிருந்து, நேராக பினாங்குக்குப் புறப்படும் கப்பல்களின் விவரம் வருமாறு:–

| | |
|---|---|
| ரான்புரா 17000 டன் | 22—1—39 |
| ராவல் பிண்டி 17000 டன் | 5—2—39 |
| காண்டன் 15500 டன் | 19—2—39 |

### ஸ்ரீ எம். கே. செட்டியாரின் வானவசனிப் பிரசங்கம்

(ஒரு நிருபர்)

தமிழ்நாட்டு வாலிப எழுத்தாளர்களில் ஒருவரும், கொளும்பு ரேடியோ நிலையச் சொற்பெருக்காளருமான ஸ்ரீ எம். கே. செட்டியார் 13-1-39 வெள்ளிக்கிழமை இரவு 7 மணி தொடக்கம் இலங்கை வானவசனி நிலையத்திலிருந்து ஒரு சொற்பெருக்கு நிகழ்த்துவார்கள். பொருளுரை, 'தை பிறந்தால் வழி பிறக்கும்' என்பது.

### சூதாட்டம் ஆடியதாக 85 பேர் கைது!

பேரூரில் சுமார் 200 பேர்கள் சேவல்பந்தய ஆட்டம் ஆடினார்கள் என்று அவர்களில் 85 பேர்களை போலீசார் கைதுசெய்து சூதாட்டத்திற்காக குற்றம் சாட்டினார்கள். சப் மாஜிஸ்டிரேட், அவர்களுக்கு அபராதம் விதித்தார்.

### வர்த்தகர்கட்கு ஓர் வேண்டுகோள்

நமது தேசத்தின் பொருளாதாரத் துறையில் முன்னேற்றங் கருதி அதற்கான விவசாயம், வியாபாரம், கைத்தொழில் இவற்றின் செழிப்பிற்கென்றே உழைத்து வர "வர்த்தக தரு" என்னும் பெயரால் தமிழ் வாரப் பத்திரிகை ஒன்று தூத்துக்குடியினின்றும் பிப்ரவரி மாததிலிருந்து வெளிவரும். அதற்குரிய ஸகல ஏற்பாடுகளும் நடைபெற்று வருகின்றன. பத்திரிகை தமிழ் தெரிந்தவர்கள் இருக்கும் எல்லா இடங்களிலுமுள்ள முக்கிய வர்த்தக ஸ்தலங்களுக்கும், தொழில் நிலையங்களுக்கும், இந்த வழியில் சிரத்தையுள்ள தனி நபர்களுக்கும் குறிப்பிட்ட எண்ணிக்கைவரை இனாமாக விலையின்றிக் கிடைக்கும்படி செய்கிறோம். வேண்டுவோர் தங்கள் விலாசங்களைப் பதிவு செய்து கொள்ளவும் என்று தூத்துக்குடி "வர்த்தக தரு" காரியாலயத்திலிருந்து அதன் மானேஜர் அறிவிக்கிறார்.



### 8 பொருள் உற்பத்தி

உழுது பயிரிட்டுச் சாகுபடி செய்வதனால் உணவுப் பொருள்களும் சாலைத் தொழில் (Industries) முறையால், ஆடை, அணிகலன், பாத்திரம், வாகனம் முதலியவைகளும் இன்னும் பல இன்ப நுகர்ச்சிப் பொருள்களும் நமக்குக் கிடைக்கின்றன. உணவுப் பொருள்களைப் போலவே இன்ப நுகர்ச்சிப் பொருள்களும் வாழ்விற்கு மிக அவசியமானவையாகும். இன்ப நுகர்ச்சிப் பொருள்க ளில்லா விட்டால், வாழ்க்கை இன்பமயமாகவும், கலையுணர்ச்சி பொருந்தியதாகவும், நாகரீகமானதாயும் இருக்காது. இவ்வாறு நாகரீகமாக வாழ்வதற்குப் பல பல பொருள்கள் தேவைப் படுவதை அவரவர்களே செய்துகொள்வதற்கு இயல்பாகவே சாத்தியமில்லாதிருக்கிறது. கல்கியைப் போல் சிறு கதைகளும் விமர்சனமும் எழுதும் திறனும், கிட்டப்பாவைப் போல் தெய்வீக சாரீரமும், சுப்பிரமணிய பாரதியைப் போல் கவிதைகள் எழுதும் ஆற்றலும் எல்லோருக்கும் இயல்பாகவே அமைவதில்லை. எவ்வளவு முயன்றாலும் சுப்பிரமணிய பாரதியைப்போல் குடியானச் சுப்பனால் கவிதைகள் எழுத முடியாது; அதேபோல் சுப்பிரமணிய பாரதியாரும் சுப்பனைப் போல் திறமையாய் உழுது பயிரிட முடியாது கவிதையும் உணவும் ஒரு நாகரீகமுள்ள சமூகத்திற்கு இன்றியமையாதன என்றுசொல்லத் தேவையில்லை. மிதமிஞ்சிய செல்வச் செழிப்பும் சிறப்புமிருந்த போதிலும் சிறந்த கவிகளில்லாத சமூகத்தை, அறிவாளிகள் நாகரீகமுடையதென்றோ, உன்னதமான சமூகமென்றும் சொல்லமாட்டார்கள். அதே போல் உணவும் தண்ணீரும் இல்லாவிட்டால் எவ்வளவு உன்னதமான கவியானாலும் இவ்வுலகத்தில் உயிருடன் வாழ முடியாது. ஆகையால் கவிக்கு வேண்டிய உணவுப் பொருள்களைக் குடியானச் சுப்பனும் குடியானச் சுப்பனுக்கு வேண்டிய பாக்களை கவியும், தங்களுக்கிடையில் பரிமாறிக் கொண்டால், இருவர்களின் மன இச்சைகள் பூர்த்தியாவதுடன் இன்பமாகவும் வாழ முடியும். சமூகமும் நாகரீகமுடையதாகவும் பண்பட்டதாகவுமிருக்கும். கவியும், இசையும் மக்களின் தினசரி வாழ்க்கையில் அடிக்கடி தேவைப்படுவதில்லை யென்றும், இவற்றை உதாரணமாக வைத்துக்கொண்டு சமூகத்தின் நிலைமையை மதிப்பிடக் கூடாதென்றும், தினசரி வாழ்க்கையில் தேவைப்படும் பொருள்

### நடப்பு வட்டி விகிதங்கள்.

| மாதம் | நாள் | சென்னை | ரெங்கூன் | பினாங்கு | சிங்கப்பூர் | செய்கோன் |
|---|---|---|---|---|---|---|
| ஈஸ்வர மார்கழி | 30 | 0-6-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 |
| தை | 29 | ,, 0-6-0 | 0-4-9 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 |
| மாசி | 30 | 0-7-0 | 0-5-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 |
| பங்குனி | 30 | 0-7-3 | 0-5-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 |
| வேகுதானிய சித்திரை | 31 | 0-7-3 | 0-4-6 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| வைகாசி | 32 | 0-7-3 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| ஆனி | 31 | 0-6-9 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| ஆடி | 32 | 0-6-3 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| ஆவணி | 31 | 0-6-3 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| புரட்டாசி | 30 | 0-6-3 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| ஐப்பசி | 30 | 0-6-3 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| கார்த்திகை | 30 | 0-6-3 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |

## சோஷலிசம் அல்லது சம உடைமை

(ஆத்தன்குடி A. L. நடராஜன்)

களை அநேகமாய் அவர்களே தயாரித்துக்கொண்டு விடலா மென்றும் சிலர் சொல்லுகிறார்கள். இது உண்மைதானா என்பதை இனிக் கவனிக்கலாம்.

உதாரணமாக நமது குடியானச் சுப்பனையே எடுத்துக் கொள்வோம். அவனுடைய தொழில் விவசாயம். ஜமீன்தார் நிலத்தின் மேல் உரிமை கொண்டாடி, கண்டு முதலில் பாதி நெல்லை வாங்கிக்கொண்டு போய்விடுகிறார். எஞ்சியபாதி அவனுக்கும் அவனுடைய பெண்டு பிள்ளைகளுக்கும் உண்பதற்கு போதுமென்றே வைத்துக் கொள்ளலாம். வயிறார உண்பதனால் மட்டும் சுப்பனுடைய வாழ்க்கை நாகரீக முடையதாய் விடுமா? ஆகாது. உணவைத் தவிர உடுப்பதற்கு ஆடைகள் வேண்டும். ஆடையின்றி நிர்வாணமாக வெளியே சென்றால், அயோக்கியன் என்று குற்றம் சாட்டி, அரசாங்கத்தார் சிறையில் அடைத்து விடுவார்கள். சமையல் செய்துகொள்ள பாத்திர பண்டங்கள் வேண்டும். ஒரு ஊரிலிருந்து பிறிதொரு ஊருக்குச் செல்வதற்கு வாகன வசதிகள் வேண்டும். உழுது பயிரிடுவதற்கு ஏர், கலப்பை முதலியன வேண்டும். இவைகள் யாவற்றையும் சுப்பன் ஒருவனால் மட்டும் செய்துகொள்ள முடியாதென்பது நிச்சயம். முடிந்தாலும் எளிதாயும், திருத்தமாயும் சிக்கனமாயும் செய்து கொள்வ தென்பது சாத்தியமில்லை. எனவே ஒவ்வொரு வரும் தங்களுக்கு தேவைப்படும்பொருள்களைத்தாங்களே செய்து கொள்ளலா மென்பது சாத்தியமு மில்லாததோடு அறியாமையுமாகும். ஆகவே ஒவ்வொரு வரும் தங்கள் தங்கள் இயல்புக்கேற்ப நாட்டிற்கு நலம் பயக்கும் தொழில்களில் ஈடுபட வேண்டும். பலபல பொருள்களை உற்பத்தி செய்து தங்களுக் கிடையில் பரிமாறிக் கொண்டால் மிகவும் எளிதாயிருக்கும். வேண்டிய அளவு ஒழிவு நேரமும் கிடைக்கும். கலை வளர்ச்சியும் ஆத்மீகவளர்ச்சியும் செழித்தோங்க இடமேற்படும்.

இங்கு ஒரு உண்மையை நாம் கூர்ந்து கவனிக்க வேண்டியது அவசியம். வேளாண்மை யன்றிப் பிற தொழில்களில் ஈடுபட்டிருப்போருக்கு, வேளாண்மைத் தொழிலிலிருந்து தான் உணவு கிடைக்க வேண்டும். அப்பொழுது தான் அவர்கள் உயிருடன் வாழ்ந்து பிற பொருள்களை உற்பத்தி செய்யமுடியும். ஆகையால் பிற தொழில்களில் திறமைசாலிகளா யிருப்போர் எப்பொழுதுமே, உணவிற்கு பணக்காரர்களின் தயவை நாடவேண்டிய திருக்கிறது. ஏனெனில் உணவுப் பொருள்கள் யாரிடத்தில் தேவையை விட அதிகமாக இருக்கின்றனவோ, அவர்களாலேயே பிற தொழிலாளிகளை வைத்து ஆதரிக்க முடியும். நமது குடியானச்சுப்பனிடத்திலோ, அவனுக்கும் அவனுடைய பெண்டு பிள்ளைகளுக்கும் போதிய உணவுதா னிருக்கிறது. ஆகையால் அவனால் பிற தொழில் செய்வோரை வைத்து ஆதரிக்க முடியாது. பின்னே யாரால் முடியும்? ஜமீன்தார்களால் சாத்தியப்படும். ஏனெனில் இவர்கள் நிலத்தின் மேல் சட்டபூர்வமாக உரிமை கொண்டாடுவதனால், உழுது சாகுபடி செய்வதில், இவர்கள் தேவையை விட அதிகமாக உணவுப் பொருள்களை சேகரித்து வைத்துக் கொள்கிறார்கள். இது ஜமீன்தார்களைப் பிற தொழிலாளிகளை அடக்கியாளும் தன்மையில் கொண்டுபோய் விடுகிறது. தொழிலாளிகள், ஜமீன்தார்களின் மனஇச்சைப்படி நடந்து கொள்ள வேண்டியதிருக்கிறது. இம்மாதிரி தேவையைக் காட்டிலும் அதிகமாகச் சேகரித்துவைத்துக் கொள்ளும் உணவுப் பொருள்களையே பொருளாதார நூல் வல்லோர் முதல் (Capital) என்று சொல்லுகிறார்கள். இதிலிருந்து நமக்கு ஒரு உண்மை புலனாகிறது. யாரிடத்தில் தேவையை விட அதிகமாக உணவுப்பொருள் (Capital) இருக்கிறதோ அவர் தான் முதலாளிகளாகவும், பணக்காரர்களாகவும் ஆக முடியும். மற்றவர்களால் அவ்விதம் ஆவது சாத்தியமில்லை. இதனோடு இன்னொரு உண்மையையும் நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுதல் வேண்டும். நிலத்தின் மேல் உரிமைகொண்டாடுவதனால் எப்படி ஒருவர் தேவையை விட அதிகமாக அடைய முடிகிறதோ, அப்படி தேவையைவிட அதிகமாகப் பணம் வைத்திருப்பவர்களாலேயும் முடியும் என்பதே அந்த உண்மை.

பொருள் உற்பத்திக்கு நிலம், முதல், உழைப்பு மூன்றும் அவசியம். மூன்றில் ஒன்றில்லா விட்டாலும் எத் தொழிலும் செவ்வனே நடைபெறாது. ஆகையால் இம்மூன்றையும் ஒரு வழிக் கூட்டி, சமூகத்திற்கு வேண்டிய பொருள்களை உற்பத்தி செய்துகொள்ள வேண்டியதிருக்கிறது. இன்று, தனிப்பட்ட ஒரு சில முதலாளிகளின் ஆதினத்தின் கீழ் நிலமும், முதலும் இருக்கின்றபடியால், அவர்கள் நாட்டின் நலத்தை லட்சியமாகக் கொண்டு பொருள்களை உற்பத்தி செய்வதில்லை. தங்களின் சொந்த லாபத்தையே குறிக்கோளாகக் கொண்டு பொருள்களை உற்பத்தி செய்து குவிக்கிறார்கள். உபயோகத்தையும் தேவையையும் கருதாமல், லாபம் ஒன்றையே குறியாகக்கொண்டு பொருள் உற்பத்தி செய்யப்படுவதனால் சமூகத்திற்கு அவசியமாக வேண்டும் பொருள் கிடைக்காமல் போவதுடன் நாட்டில் வறுமையும், பசியும், பிணியும் கூத்தாடுகின்றன. உதாரணமாக ஆடை உற்பத்தியை எடுத்துக் கொள்வோம். நம் நாட்டு மக்களுக்குப் போதிய அளவு ஆடை நம் நாட்டில் உற்பத்தி செய்யப் படவில்லை. அந்நிய நாடுகளிலிருந்து நாம் துணிகளை இறக்குமதி செய்கிறோம். நம்மை ஆளும் அரசு அந்நிய நாட்டு முதலாளிகளின் அதிகாரத்திற்கு உட்பட்டு இருப்பதால், அவர்கள் நம் நாட்டுச் சாலைத் துணிகளுக்கு போதிய அளவு சலுகை காட்டுவதில்லை. இதனால் நம் நாட்டில் போதிய அளவு முதலும் மூலப்பொருள்களும் (Raw material) இருந்தும், இந்திய முதலாளிகளால் வெள்ளை முதலாளிமார்களோடு போட்டிபோட்டு லாபகரமான முறையில் துணிகளைத் தயாரித்து விற்பனை செய்ய முடியவில்லை. ஆகையாலே நம்மிந்திய முதலாளிகள் தங்களின் கையிலுள்ள முதலை, பர்மா, மலேயா, கொச்சின் சைனா முதலிய அந்நிய நாடுகளில் கொண்டுபோய் வியாபாரம் நடத்துகிறார்கள். இதனால் நம் நாட்டு மக்களுக்கு சகாயமான விலைக்கு துணிகள் கிடைக்காமல்போவதுடன், வேலையில்லாமலும் துன்பப்படுகிறார்கள். பசியின் கொடுமையைப் போக்கிக்கொள்ள அந்நியநாடுகளுக்குச் சென்று கூலிவேலை செய்து பிழைக்கிறார்கள்.

இது மட்டுமல்ல, லாபம் கிடைத்தால் நாட்டு மக்களுக்கு தீமை பயக்கும்

(12-ம் பக்கம் பார்க்க)

## புதுயுக மைந்தர்க்குப் பொங்கற் பாட்டு

(சுவாமி சுத்தானந்த பாரதியார்)

[கொழும்பு ஸ்ரீ ஆர். எம். எஸ். எம். கதிரேசனார் (எம். கே. செட்டியார்) அசரீரி நிலையப் பிரசங்கத்திற்கென்று தமிழறிஞர் சுவாமி சுத்தானந்த பாரதியாரவர்களால் ஈண்டு வெளியிட்டுள்ள பொங்கற்பாட்டு இயற்றப்பட்டது. ஸ்ரீ எம். கே. செட்டியார் தமது சொற்பொழிவில் இதனை இணைத்து ஒலிகருவி வழியாகப் பரப்புவுற்றார். பொங்கல் விழாவின் பெற்றியைத் துலக்கி புதுயுகத் தமிழர்க்குரிய கடமைகளை மிக அழகாக உணர்த்துகின்றார் சுவாமிஜீ. இதனைப் படிக்கும் நேயர்கள் உள்ளத்திலும் மகிழ்ச்சி பொங்குவதாக.]

பொங்குக பொங்குகவே— பால்
பொங்குக, மங்கலமே
எங்குமே பூவும் கனியும் பசுமையும்
இன்புறப் பொங்குகவே.

ஒற்றுமை யோங்குகவே— மாந்தர்
உள்ள மகிழுகவே........
பற்றலர் தீமையும் போரும் பொறு [மையும்
பட்டென் றொழியுகவே

கரும்பைச் சுவைத்திடுவோம்—ஞானக்
கற்கண்டை யுண்டிடுவோம்
விரும்பி யெல்லாரு நெருங்கி யமர்ந் [தின்று
விண்விளக் கைத் தொழுவோம்

பெண்ணை வணங்கிடுவோம்–பராசக்தி
பேரை முழங்கிடுவோம்....
கண்மணிச் செல்வர்— கனியிளங் [கன்னத்திற்
கண்ணனைக் கொஞ்சிடுவோம்

அன்பை வளர்த்திடுவோம்— நெஞ்சில்
ஆர்வம் வளர்த்திடுவோம்.
இன்பவுணர்வினால் இன்னலை வென் [றருள்
ஈகை வளர்த்திடுவோம்.

வீசெழில் ஆண்மையிலே — ரகு
வீரன் விளங்குகவே....
தேசுறுங் கல்வியும் இல்லறச் செல்வ [மும்
சேர்ந்து விளங்குகவே

மங்கி மறைந்தொழிக— கொடிய
வறுமை மடமை யிருள்....
செங்கதிர்ச் சோதி செகமெங்கு நித்திய
சேமம் பரப்புகவே.

ஆருயிர் வாழ்வினிலே—உண்மை
அன்புச் சுடர் விரிக....
பாருயர் பாரதச் சீருயர்ந் தோங்கிப்
படர்கள் விலகுகவே

சோதர சோதரிகாள்— நாம்
சுதந்திரப் பொங்க லுண்போம்.
பூதல மெங்கும் புதுநல வாழ்க்கை
பொழிக திருவருளால்.

வாழ்க வுயிர்க்குலமே— அறம்
வாழ்க ஜெயம் பெருகி
வாழ்க வுலகெல்லாம் வானம் வழங்குக
வாழ்க பொதுநலமே.

# கோர்ட்டுகளின் நிர்வாக அறிக்கை

## 102 பேருக்கு ஒரு ஸிவில் கேசு

இம்மாகாணத்திலுள்ள, ஹைக்கோர்ட் உள்ளிட்ட ஸிவில், கிரிமினல் கோர்ட்டுகளின் 1937-ம் வருஷ நிர்வாகஅறிக்கை அரசாங்கக் குறிப்புடன் வெளியிடப்பட்டு, நமக்கு அனுப்பப்பட்டிருக்கின்றது. அதிலிருந்து சில முக்கியமான அம்சங்களைக் கீழே தருகிறோம்.

### ஸிவில் கோர்ட்டுகள்

சென்ற சில வருஷங்களாக, ஸிவில் கோர்ட்டுகளில் தாக்கல் செய்யப்படும் வழக்குகளின் எண்ணிக்கை படிப்படியாகக் குறைந்து வருவதை அடியில்கண்ட புள்ளி விவரங்கள் விளக்கும்:—

| | | |
|---|---|---|
| 1933 | — | 632,964 |
| 1934 | — | 578,170 |
| 1935 | — | 561,144 |
| 1936 | — | 532,457 |
| 1937 | — | 430,913 |

(சென்னை) நகர ஸிவில் கோர்ட்டில் மட்டும் கேஸ்களின் தொகை கொஞ்சம் உயர்ந்திருக்கிறது.

ஜில்லா முன்ஸீப் கோர்ட்டுகளில், முந்தின வருஷம் பைசல்செய்யப்பட்ட கேஸ்கள் 79,736; பிரஸ்தாப வருஷம் 72,575 தான் பைசல் செய்யப்பட்டிருக்கின்றன. ஸ்மால் காஸ் கேஸ்களில், முந்தின வருஷம் 115,233-ம் இந்த வருஷம்94,230ம் பைசல் செய்யப்பட்டன.

ஜில்லா முன்ஸீப் கோர்ட்டுகளில், வருஷக் கடைசியில் பைசலாகாமல் நின்ற அசல் தாப்பு கேஸ்களின் தொகை முந்தின வருஷம் 41,984—லிருந்து இவ்வருஷம் 41,013 ஆகக் குறைந்தது. ஒரு வருஷத்துக்குமேல் பைசலாகாமல் நின்ற கேஸ்களின் தொகையும் 9,831—லிருந்து 8,481 ஆகக் குறைந்தது. பூரணமாக விசாரணை முடிந்து பைசலான கேஸ்களின், விசாரணைகாலம் சராசரி 348 நாட்களிலிருந்து 365 ஆக உயர்ந்திருக்கிறது. ஒங்கோல் ஜில்லா முன்ஸீப் கோர்ட்டில் இந்த சராசரிக் காலம் 800 நாட்கள்!

சபார்டினேட் ஜட்ஜ் கோர்ட்டுகளில் வருஷக் கடைசியில் முடிவாகாமல் நின்ற கேஸ்களின் எண்ணிக்கை 3,246—லிருந்து 3,006 ஆகக் குறைந்திருக்கின்றது. ஒரு வருஷத்துக்கு மேல் பைசலாகாமல் நின்ற கேஸ்களின் தொகையும் 1,433—லிருந்து 1,314 ஆகக் குறைந்திருக்கிறது. பூரணமாக விசாரணை முடிந்து பைசலான கேஸ்களின் விசாரணைக் காலம் சராசரி 471 நாட்களிலிருந்து 509 நாட்களாக அதிகரித்து விட்டது. சிவகெங்கை சபார்டினேட் ஜட்ஜ் கோர்ட்டில் இது 900 நாட்களுக்கு மேலாகிவிட்டது.

இன்ஸால்வென்ஸி மனுக்கள், மொத்தம் சென்னையிலும், வெளியூர்களிலும் 2,155 தாக்கல்செய்யப்பட்டன. முந்தின வருஷம் இத்தொகை 5,013 ஆக இருந்தது.

நீதிவழங்கும் அதிகாரிகள்: ஹைக்கோர்ட்ஜட்ஜிகள் 14; சென்னை ஸ்மால்காஸ் கோர்ட்டில் 1 பிரதம ஜட்ஜியும், 2 ஜட்ஜிகளும்; நகர ஸிவில் கோர்ட்டில் 1 ஜட்ஜி. 26 ஜில்லா ஜட்ஜிகள். மாகாண கவர்ன்மெண்டின் 2 ஏஜண்டுகள். சபாடினேட் ஜட்ஜிகள் 37. மாகாண ஸ்மால்காஸ் கோர்ட் ஜட்ஜி 1 (சபார்டினேட் ஜட்ஜி அதிகாரமுடையவர்). ஏஜன்ஸி பிரதேசங்களில் 6 ஸ்பெஷல் அஸிஸ்டெண்டு ஏஜண்டுகள். 1 ரிவனியூ ஆபீஸர் (கொச்சி டிப்டி கலக்டர்) சபார்டினேட் ஜட்ஜ் அதிகாரமுடையவர். ஜில்லா முன்சிபுகள் 141. ஏஜன்ஸி முன்ஸிபுகள் 12. ஜில்லா முன்ஸீப் அதிகாரமுடைய 4 ரிவனியூ ஆபீஸர்கள். ரெவனியூ கேஸ்களைப் பைசல் செய்யும் 78 ரிவனியூ ஆபீஸர்கள். கிராம முன்சிபுகள் 6,407. பஞ்சாயத்துக் கோர்ட்டுத் தலைவர்கள் 4,169.

பிரஸ்தாப வருஷத்தில் எல்லா ஸிவில் கோர்ட்டுகளிலும் தாக்கல் செய்யப்பட்ட கேஸ்களின் எண்ணிக்கை 430,913. முன் வருஷம் 532,457. மாகாண ஜனத் தொகை வீதாசாரப்படி, 102 பேர்களுக்கு ஒரு கேஸ் வீதமாகிறது. முன் வருஷம் 83 பேர்களுக்கு ஒன்றாகவிருந்தது. சென்னை நகரில் மட்டும் கணக்கிட்டால் 36 பேர்களுக்கு ஒன்றும், சென்னை நீங்கலாக, வெளி ஜில்லாக்களில் 105 பேர்களுக்கு ஒன்றுமாகிறது.

பிரஸ்தாப வருஷத்தில், பிரிவி கவுன்ஸிலுக்கு அப்பீல் கோரி ஹைக்கோர்ட்டில் தாக்கல் செய்யப்பட்ட மனுக்கள் 33. முந்தின வருஷம் பைசலாகாமல் நின்ற மனுக்கள் 31. இவற்றுள் 33 தள்ளுபடி செய்யப்பட்டன. 15க்கு அனுமதியளிக்கப்பட்டது. பாக்கி 16 இனி முடிவு செய்யப்பட வேண்டும்.

பிரஸ்தாப வருஷத்தில் 9 அப்பீல்களை பிரிவி கவுன்ஸில் முடிவு செய்தது. 2ல் அப்பீல் ஏற்றுக்கொள்ளப் பட்டது. 7ல் அப்பீல் தள்ளுபடி செய்யப்பட்டது.

இவ் வருஷம் 225 அட்வகேட்டுகள் புதிதாகப் பதிவுசெய்து கொண்டனர்; இதன் மூலம் கிடைத்த வருவாய் ரூ 1,36,375. 3,947 முதல்தர பிளீடர்களுக்கும், 339 இரண்டாந்தர பிளீடர்களுக்கும் சன்னது வழங்கப்பட்டது. இதன் மூலம் கிடைத்த வருவாய் ரூ 1,04,435.

ஹைக்கோர்ட்டைச் சேர்ந்த கோர்ட்டு பீஸ் பரிசோதகர்கள் இவ் வருஷம் 103 கோர்ட்டுகளில் பரிசோதனை நடத்தி 1,16,664 ரூபாய் இவ்வினத்தில் குறைவேற்பட்டதைக் கண்டு பிடித்தனர். இந்த இனத்தில் வசூலாக்கப்பட்ட தொகை ரூ 21,206.

### கிரிமினல் கோர்ட்டுகள்

பிரஸ்தாப வருஷம் கிரிமினல் கோர்ட்டுகளில் தாக்கல் செய்யப்பட்ட கேஸ்களின் தொகை சென்ற வருஷத்தைவிட 32,337 அதிகரித்தது. சென்னை நகரப் போலீஸ் சட்டப்படியுள்ள குற்றங்களே பெரும்பகுதியும் இதன் காரணம்.

விசாரணை அதிகாரிகள்: ஹைக்கோர்ட் ஜட்ஜிகள் 14. செஷன்ஸ் ஜட்ஜிகள் 29. அஸிஸ்டண்டு செஷன்ஸ் ஜட்ஜிகள் 22. ஜில்லா மாஜிஸ்டிரேட்டுகள் (அடிஷனல் ஜில்லா மாஜிஸ்டிரேட்டுகள் 5 பேர் உள்பட) 29. பிரஸிடென்ஸி மாஜிஸ்திரேட்டுகள் 3. சப்டிவிஷனல் மாஜிஸ்திரேட்டுகள் 94. ஜாயின்ட் & டிப்டி மாஜிஸ்திரேட்டுகள் 13. தாசில்தார், டிப்டி தாசில்தார் மாஜிஸ்டிரேட்டுகள், ஸ்டேஷனரி சப் மாஜிஸ்திரேட்டுகள், இன்னும் மாஜிஸ்திரேட் அதிகாரமுள்ள இதர உத்யோகஸ்தர்கள் எல்லாம் சேர்ந்து 475 சபார்டினேட் மாஜிஸ்திரேட்டுகள். ஸ்பெஷல் மாஜிஸ்திரேட்டுகள் 62. தனியாக அமர்ந்து விசாரணை செய்யும் கௌரவ மாஜிஸ்திரேட்டுகள் 44.

இவர்களுடன், 1,712 கௌரவ மாஜிஸ்திரேட்டுகள், 1085 கிராம மாஜிஸ்டிரேட் கோர்ட்டுகள் 3,555 பஞ்சாயத்துக் கோர்ட்டுகள் இவர்களால் அமைக்கப்பட்ட 218 மாஜிஸ்டிரேட் பெஞ்சுகள்.

பிரஸ்தாப வருஷத்தில் தாக்கல் செய்யப்பட்ட கேஸ்களின் தொகை 505,780. சென்னை நகரில் மட்டும் கேஸ்களின் தொகை 29,473 அதிகரித்தது.

வெளி ஜில்லாக்களில் கொலைக் குற்றத்திற்காக, செஷன்ஸ் கோர்ட்டுகளில் விசாரணை செய்யப்பட்டோர் 1,716. இவருள் 213 பேருக்கு மரண தண்டனையும், 453 பேர்களுக்கு வேறு விதத்தண்டனைகளும் விதிக்கப்பட்டன. ஹைக்கோர்ட் செஷன்ஸில் கொலைக் குற்றத்துக்கு 18பேர் விசாரிக்கப்பட்டதில் 1 நபருக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது. 2 பேர் தீவாந்தர சிட்சை விதிக்கப்பட்டனர்.

கிராம, பஞ்சாயத்துக் கோர்ட்டுகள் நீங்கலாக, இதரக் கோர்ட்டுகளால்

(13-ம் பக்கம் பார்க்க)









# "சாதி, வகுப்புமுறை ஒழிக"

## லாகூர் ஜட் - பட் தோரக் மண்டலின் பிரசாரம்

### தேசத் தலைவர்களின் ஆசி.

லாகூரில் அமைந்திருக்கும் 'ஜட்—பட் தோரக் மண்டல்' எனும் சாதியொழிப்பு சங்கத்தின் துண்டுப்பிரசுரமொன்று நமக்கு அனுப்பப்பட்டிருக்கிறது. அதில் சங்கத்தின் நோக்கம், செய்து வரும் தொண்டு, ஏற்பட்ட பலன், இனிச் செய்ய உத்தேசிக்கும் வேலைகளைப்பற்றிய திட்டம் முதலிய விவரங்கள் விளக்கப்பட்டிருக்கின்றன. இச்சங்கத்தார் செய்து வரும் ஊழியத்தைப்பாராட்டியும், சாதிமுறை ஒழிய வேண்டியதன் அவசியத்தை வற்புறுத்தியும் மகாத்மா காந்தி, பண்டித ஜவாஹர்லால் நேரு முதலிய தேசத் தலைவர்களின் பாராட்டு மொழிகளும் பிரசுரிக்கப்பட் டிருக்கின்றன. சுருக்கி மொழி பெயர்த்துக் கீழே தருகிறோம்.

#### ஆரம்பம்

1922 நவம்பர் மாதம் பாய் பரமானந்தர் அவர்களைத் தலைவராகக் கொண்டு இச்சங்கம் ஸ்தாபிக்கப்பட்டது. இது ஆரம்பித்துள்ள சாதி எதிர்ப்பு இயக்கம், நாட்டின் தூரபாகங்களையும் எட்டும்படி பரவியிருக்கிறது. தீண்டாமையை ஒழித்து, நாட்டில் தேசிய ஒற்றுமையை ஸ்தாபிக்க, சீர்திருத்த வாதிகளும், தலைவர்களும் பல தடவை தொடர்ச்சியாக முயற்சித்தும் அவர்களது முயற்சி வெற்றிபெறாமற் போனதற்கு, சாதி உணர்ச்சியே காரணமென்பதை எல்லாரும் ஒப்புக்கொள்கிறார்கள். ஜனநாயக முறைக்கு விரோதமாக அமைந்திருக்கும் சமூகஅடிப்படைமுற்றும் திருத்தியமைக்கப்பட்டாலொழிய மகாத்மா காந்தி செய்துள்ள வேலை பூர்த்தியாகாமலே இருந்துவரும். ஹிந்து மக்கள் சமூகத்தில், புரட்சிகரமான ஒரு மாற்றத்தை உண்டுபண்ணும் நோக்கத்துடன், இடையறாது பிரசாரஞ் செய்து, சாதி எதிர்ப்புப்போர் நடத்துவதே இந்த மண்டலின் நோக்கம்.

#### பிரசாரம்

இச்சபை 'க்ராந்தி' என்ற மாத சஞ்சிகையை உருது மொழியில் வெளியிட்டு வருகிறது. வட இந்தியாவில் இது மிகவும் செல்வாக்குப் பெற்றிருக்கிறது. இன்னும் இந்த இயக்கத்தை ஆதரிக்கும் ஹிந்தி, இங்கிலீஷ், உருது, மராத்தி, தமிழ் பத்திரிகைகள் பல இருக்கின்றன. சாதி எதிர்ப்புப்படையினர் பல இடங்களுக்கும் சென்று பிரசங்கம் புரிந்தும், பிரசுரங்கள் வழங்கியும் வருகின்றனர். இந்த 16 வருஷங்கட்குள் சங்கத்தின் சார்பில், மகாநாடுகள், சாதி யொழிப்பு போஜனங்கள் முதலியன பல நடத்தப்பட்டிருக்கின்றன. இச்சங்கத்தின் கணக்குகள் ஒழுங்காக வைக்கப்பட்டு வருஷந்தோறும் 'ஆடிட்' செய்யப்படுகின்றன. 1937-38ல், வரவு ரூ 11,444-4-6 செலவு ரூ 11,412-11-6.

#### கலப்பு விவாகம்

சங்கத்தில், கலப்பு விவாகத்திற்கென்று ஒரு தனி இலாகா இருக்கிறது. இதன் மூலம் நூற்றுக்கணக்கான கலப்பு விவாகங்கள் நடத்தப்பட்டிருக்கின்றன.

#### ஜன கணிதம்

சென்ற ஜனகணிதத்தின் போது, சாதியின்னதென்று குறிக்க விரும்பாதவர்கள், ஸென்ஸஸில் தங்களை 'ஒரு ஜாதியுமில்லாதவர்கள்' என்று பதிவு செய்து கொள்ள ஏற்பாடு செய்தது. 1931ம் வருஷத்து ஜனசங்கியை அறிக்கையில் இவ்வாறு குறிக்கப்பட்டிருக்கிறது:—

"பத்திரிகைகள் மூலமும், பிரசங்கம் மூலமும் சென்ற பத்துவருஷத்தில் சாதியொழிப்புப் பிரசாரம் பலமாக நடந்திருக்கிறது. ஜட்-பட் தோரக் மண்டல் இதில் மிகுந்த அக்கரையெடுத்துக் கொண்டது" இந்த இயக்கத்தின் பலனாக, 19 லட்சம் பேர், சாதி இன்னதென்று குறிக்க வேண்டிய கட்டத்தில் தாங்கள் ஒரு சாதியுமில்லாதவர்கள் என்று பதிவு செய்து கொண்டார்கள். அடுத்த சென்ஸஸ் 1941ல் நடக்கும். அதில இந்திய ஜட்—பட் தோரக் ஸென்ஸஸ் சங்கம் எனும் பெயரால் ஒரு சங்கம் அமைக்க ஏற்பாடு நடைபெறுகிறது. இதற்கு அங்கத்தினர்கள் சேர்க்கப்பட்டு வருகிறார்கள். தேசத்திலுள்ள முக்கியஸ்தர்களெல்லாம் இதற்கு ஆதரவளித்துள்ளார்கள். ஒருவர் தமக்கு சாதியில்லையென்று மறுப்பது தேசிய ஒற்றுமை நோக்கி ஒரு படியேறுவதாகும். நமக்கு நாசம் விளைவித்த இந்தச் சாதித்திட்டத்திற்கு நாம் அடிமைகளல்லவென்பதை வருகிற ஸென்ஸஸ் நிரூபிக்கும் என நம்புகின்றோம். மிகக் கொடூரமானதும், நமது முன்னேற்றத்துக்குத் தடையானதுமான ஒரு அமைப்பு முறையை எதிர்க்க நமக்கு தைரியமில்லையென்றால், நாம் சுயராஜ்யம் அடைய லாயக் குள்ளவர்களல்ல; அதைப் பெற்றாலும், வைத்துக் காப்பாற்றும் சக்தியற்றவர்களாவோம். எனவே, இந்த அபாயகரமான சாதி முறையை ஒழிக்க நமது முயற்சியைப் பெருக்குவோமாக.

#### வருங்காலத் திட்டம்

ஹிந்தியில் 'யுகாந்தர்' என்ற பெயருடன் ஒரு பத்திரிகை ஆரம்பிக்கவும், ஏராளமான பிரசாரகர்களை நியமிக்கவும் சங்கம் உத்தேசிக்கிறது. இது வகைக்கு 50,000 ரூ. திட்டமிடப்பட்டிருக்கிறது. எல்லோரும் உதவி செய்யும்படி கோரப்படுகிறார்கள்.

#### பெரியார் அபிப்பிராயங்கள்

கலப்பு விவாகம் ஆட்சேபிக்கத் தக்கதல்ல. ஒரு சூத்திரர் பிராமணப் பெண்ணை மணக்கலாம்.

—மகாத்மா காந்தி

★

முன் காலத்தில் சாதி முறைக்கு என்ன பெருமை இருந்திருந்த போதிலும், எல்லாவித முன்னேற்றத்துக்கும் தடை கல்லாக ஆகிவிட்டபடியால், நம்மிடமிருந்து எத்தகைய அனுதாபத்தையும், உணர்ச்சி பூர்வமான தொடர்பையும் அது பெறத் தகுதியுடையதல்ல. அதை வேரோடு களைந்து நமது சமூகக்கட்டைத் திருத்தியமைக்க வேண்டும்.

—பண்டித ஜவஹர்லால் நேரு

★

சுத்தி, சங்கதன், தீண்டாமை யொழிப்பு இவற்றின் நோக்கம் நிறைவேற வேண்டுமானால், சாதிக் கட்டுகளைக் கட்டாயம் உடைத்தெறிந்து தீரவேண்டும்.

பாரிஸ்டர் வி. டி. ஸவர்க்கார்

★

வரப்போகும் போரில் ஹிந்துக்கள் காப்பாற்றப் பெறவேண்டுமானால், ஹிந்து சமூகத்திலிருந்துஜாதிப்பாகுபாடென்னும் கொடிய, அருவருக்கத்தக்க கோட்பாடு ஒழிதல் வேண்டும்.

டாக்டர் அம்பேத்கார்

★

இந்துக்களிடையே ஐக்கியம் ஏற்படுவதற்கு தாண்ட முடியாத தடையாக நின்று வரும் சாதி முறையை வாலிபர்கள் எதிர்த்துப் போராட வேண்டியது அவசியம்.

—ஸர் ஹரிசிங் கௌர்

★

மதப் பித்தர்களுடைய கொடுமைகளினின்றும், தாக்குதல்களினின்றும் தங்களைப் பாதுகாத்துக்கொள்ள இந்துக்கள் விரும்பினால், அவர்கள் சாதி வகுப்பு முறையை அழித்துத் தீரவேண்டும்

—ஸர் ரவீந்திரநாத் தாகூர்

★

சாதி முறைக்கு எதிராகப்போர்க்கொடி உயர்த்தும் உரிமை வாலிபர்களைச் சார்ந்தது.

—ஸ்ரீமதி ராமேஸ்வரி நேரு

★

சாதி ஒழிப்பு வேலைதான் முதன் முதகத் தேவைப்படும் வேலை.

—ஜம்ஷேட் யன் மேத்தா.

★

ஜட்பட்தோரக்மண்டலத்தைப்போன்ற ஸ்தாபனங்கள் ஒவ்வொரு கிராமத்திலும் ஏற்பட்டால்,நமது நாட்டின் விடுதலை மிகச் சீக்கிரமாகவும், எளிதாகவும் கிடைத்துவிடும்.

—ஸ்ரீமதி அலமேலுமங்கைத் தாயாரம்மாள்.




# மாதர் மறுமண சகாய சங்கக் கிளை ஸ்தாபனம்

## குன்றக்குடியில் திறப்பு விழா

(நமது நிருபர்)

6—1—39 வெள்ளிக்கிழமை மாலை 4-மணிக்கு குன்றக்குடி மோகனதாஸ் கல்வி நிலையத்தில் மாதர் மறுமண சகாய சங்கக் கிளைஸ்தாபனத் திறப்பு விழா, காரைக்குடி 'குமரன்' ஆசிரியரும் மாதர் மறுமண சகாய சங்கக் காரியதரிசியுமான, ஸ்ரீ சொ. முருகப்பா அவர்கள் தலைமையில் நடைபெற்றது. சங்க அமைப்பாளர்களால் தலைவருக்கு உபசாரப் பத்திரமொன்று வாசித்தளிக்கப்பட்டது. ஆ. முத்துப்பட்டணம் லோகநாயகி வித்தியாசாலை மாணவிகள் இருவர் பாட்டுப் பாடினர். திறப்பாளர் உபாத்தியாயர் பாண்டியன் அவர்கள் கரகோஷத்தினிடையே சங்கத்தைத் திறந்து வைத்துப் பேசும்போது, சுதந்திர நாடுகளில், பெண்கள் சுதந்திரமாக வாழுகிறார்களென்றும், அடிமை நாட்டில் பெண்கள் அடிமையாக வாழுகிறார்களென்றும், பெண் சுதந்திர மில்லாவிட்டால் தேசம் சுதந்திரமடைய முடியாதென்றும் கூறி, மாதர் மறுமணத்தின் அவசியம் பற்றி சிறிது நேரம் பேசிய பின்னர், திரு. முருகப்பா இவ்வியக்கத்தில் தீவிரமாக இறங்கி வெற்றி கண்டு வருகிறாரென்றும், தமிழ் நாட்டுக்கே முதன் முதல் இவ்விபக்கத் தலைவராக இருந்து வருகிறாரென்றும் குறிப்பிட்டார். தலைவர் தமது முகவுரையில், மனிதர்கட்கு ஜீவகாருண்யமும், பரோபகார சிந்தனையும் மிக மிக அவசியமென்றும், பணக்காரர்களுடைய பணம், ஏழைகளுக்கு நல்ல முறையில் செலவழிக்கப்பட வேண்டுமென்றும், ஆணும் பெண்ணும் சமமாகப் பாவிக்கப்பட்டு, சம அறிவு வளர்ச்சியுறவேண்டுமென்றும், இல்லாவிட்டால் தேசம் அடிமையாகவே இருக்குமென்றும், கல்வி வசதியளிக்க வேண்டுமென்றும், கைம்பெண்கள், விரும்பினால் மறுமணம் செய்துகொடுக்கவேண்டுமென்றும், மறுமணத்திற்கு சாஸ்திரங்களில் ஆதாரங்கள் இருக்கின்றனவென்றும், மிக விஸ்தாரமாக சொற்பொழிவாற்றினார்கள்.

திரு. உலகுசுந்தரம் சிறிது நேரம் பேசினார். அதன்பின்னர் திரு பெ. மு. கிருஷ்ணன் சீர்திருத்தமில்லாமல் சுயராஜ்யம் வந்தாலும் பயனொன்றுமில்லையென்றும், சீர்திருத்தம் முதலில் ஆக வேண்டிய காரியமென்றும், இருபாலரின் ஒழுக்கம் காக்கப்பட வேண்டுமென்றும், மணமாகாத வாலிபர்கள் அவரவர்கள் குடும்பங்களிலுள்ள விதவைகளை மணந்துகொள்ள முன்வந்தால் பின்னர் விதவைகளே இருக்க மாட்டார்களென்றும், சங்க அமைப்பாளர்கள் நடக்க வேண்டிய விதத்தைப் பற்றியும், திரு. முருகப்பா தம் ஆஸ்தி முழுமையும், மகளிர் இல்லத்திற்குத் தியாகம் செய்திருக்கிறாரென்றும் அவர்கள் தலைமையில் இவ்விழா நடப்பது பெரிய விசேஷமென்றும் குறிப்பிட்டார்.

சங்க உத்தியோகஸ்தர்களின் பெயர்கள் படிக்கப்பட்டன.

வந்தனம் கூறப்பட்டது. இரவு 7 மணிக்குமேல், திரு சொ. முரு. அவர்களால் மாஜிக் லாண்டர்ன் படக்காக்ஷி காட்டப்பட்டது. இதற்கு கானாடுகாத்தான் எலெக்ட்ரிக் கார்ப்பரேஷனால் ஸ்பெஷல் கனெக்ஷன் கொடுத்துதவப்பட்டது.

(நமது நிருபர்)

தேவகோட்டை நகரக் காங்கிரஸ் கமிட்டியின் சார்பில் ஜனவரி 5உ மாலை 7மணிக்கு ஜவஹர் மைதானத்தில் ஸ்ரீ எ. ரெங்கசாமி அய்யங்கார் B.A.B.L, M.L.C. தலைமையில் ஒரு பொதுக்கூட்டம் நடைபெற்றது. சுமார் இரண்டாயிரம் ஜனங்கள் கொண்ட ஒரு பெருங் கூட்டமிருந்தது. அவ்வமயம் சென்னைசர்க்காரின் கோர்ட்டு, ஜெயில், மந்திரி கனம் ராமன் மேனேன் மரணம் குறித்து அனுதாபம் எல்லோரும் எழுந்து நிற்க, தெரிவித்துக்கொள்ளப் பட்டது.

பசும்பொன் ஸ்ரீ முத்துராமலிங்கத்தேவரும், ஸ்ரீ ப. ஜீவானந்தமும் விஜயம் செய்திருந்தனர். சுமார் 7 சங்கங்களிலிருந்து ஸ்ரீ முத்துராமலிங்கத் தேவருக்கு மாலைகள் அணிவிக்கப்பட்டன.

### ஸ்ரீ ப. ஜீவானந்தம்

முதன் முதலாக ஸ்ரீ ஜீவானந்தம் பேசுகையில் கூறியதாவது:—இந்த 39-ம் வருடம் ஒரு முக்கியமான வருடம். குறிதெரியாது அம்பெய்வது சரியல்ல. புரட்சிகரமான எழுச்சி மக்களிடையே ஆனந்தத் தாண்டவமாடுகிறது. நாம் 39-ம் வருடத்தில் செய்யவேண்டிய வேலைகளை நிர்ணயம் செய்ய இரண்டு மகாநாடுகள் கூட்டப்பட்டன. ஒன்று இராஜபாளையம் மகாநாடு மற்றொன்று வத்தலக்குண்டு மகாநாடாகும். முன்னமேயே நடந்த வத்தலக்குண்டு மகாநாட்டுத் தீர்மானங்களையும் இராஜபாளையம் மகாநாட்டுத் தீர்மானங்களையும் ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது இராஜபாளையம் மகாநாட்டுத் தீர்மானங்கள் வழவழாத்தன்மை பொருந்தியவை. நமக்கு அவநம்பிக்கை கொடுக்கும்படியானவை—சாம்பல் பூத்தவையென்று சொல்லலாம். தமிழ்நாடு மகாநாடு, ஏகாதிபத்திய எதிர்ப்புச் சங்கம், சுயராஜ்யவிரும்பிகள் சங்கம், இன்னும் ஏனைய சங்கங்கள் நமக்குக்கு மந்திரிசபைமீது நம்பிக்கை என்றும், காரியக்கமிட்டிமீது நம்பிக்கையென்றும், காங்

# காங்கிரஸ் பதவி யேற்றதின் நோக்கம்

## தொழிலாளியும் விவசாயியுமே காங்கிரஸின் தூண்கள்

### தேவகோட்டையில், ஸ்ரீமான்கள் தேவர், ஜீவானந்தம் பிரசங்கம்

கிரஸ் மகாசபைமீது நம்பிக்கை என்றெல்லாம் தீர்மானங்கள் நிறைவேற்றுவது எங்களப்பன் குதிருக்குள் இல்லையென்பது போலாகும். உலகத்திலிருக்கிற ஏகாதிபத்தியத்தின் பாசீசம், நாசிசம் ஒழிய வேண்டுமானால், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தைக் குழிதோண்டிப் புதைத்து இந்திய அரசாங்கத்தை நிலைநாட்ட வேண்டுமானால், உலகமுழுதும் பாசிஸ்டு கையிலிருந்து விடுபட்டு இன்பக்கடலில் மூழ்க வேண்டுமானால், உலகப் படத்திலிருந்து பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் எடுக்கப்பட வேண்டுமானால் படித்தவர்கள் பாஷாணத்தைத்தின்பது, ரயிலில் விழுந்து பாழுங்கிணற்றில் விழுந்து சாதல், அலரிக்கிழங்கு அல்லது நவநாகரீகமுறையில் எலக்ட்ரிக் கம்பியைப்பிடித்துச்சாதல், பி. ஏ. எம். ஏ. படித்த தரித்திரன் வேலையில்லாத் திண்டாட்டம் முதலியவற்றிலிருந்து விடுபடவேண்டுமாயின் ஏகாதிபத்தியத்திலிருந்து விடுபட உழைக்கவேண்டும். ஜெயில், துப்பாக்கி, குண்டு, சட்டம் முதலியவற்றினால் ஆளும் சைத்தான் முறை ஏகாதிபத்திய ஆட்சி. லெமோரியா தீவிலிருந்து வந்தது தமிழ்க்கலை—ஆரிய நாகரீகம் என்று சொல்லிக்கொண்டு 37 கோடி அடிமை நாய்களாய்க் கிடக்கின்றோம் என்பதை வயிறெரியப் பார்க்கவேண்டும். இந்தியாவில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் எப்பொழுதும் இருக்கவேண்டுமென்று சொல்லிக்கொண்டு, அதிகாரிகளின் காலைக் கழுவித் தண்ணீரைக் குடிக்கும் தொங்கு சதைகளுமிருக்கின்றனர். காலையில் எழுந்து நாள்முழுதும் உழைத்து வயிற்றுக் கஞ்சிக்குத் திண்டாடும் 7000000 குடியானவர்களின் உழைப்பை முதலாளிகள் கடைகளில் கத்தரிக்காய் வாங்குவது போல் ஒரு அணு இரண்டணு விற்குவாங்கி விடுகிறார்கள். 3 முறை அகிலஇந்திய காங்கிரஸ்தலைவராக இருந்து காந்தியடிகளிடம் நற்சாக்ஷிப்பத்திரம் பெற்ற ஜவஹர் "If India lives England dies, if England lives India dies" என்று சொல்லியிருக்கிறார். மனித வாழ்க்கையைப் பார்ப்பதற்கு சோஷியலிசம் ஒரு முக்கிய கண்ணுடி என்றும், அவன் குறுகிய மனப்பான்மை கொண்டவனல்ல சர்வதேச வாதியென்றும் சொல்லியிருக்கிறார். நளைத்தசேலையின் முன்தானையை புளியமரத்தில் கட்டிவிட்டு மறுதானையைச்சுற்றிக் கொண்டு இங்குமங்கும் திரும்பி மாதர் மானங்காப்பாற்றும் நிலைமையிலிருக்கின்றனர். பச்சைக் குழந்தையை வெய்யலில் வரப்போரத்தில் போட்டு விட்டு—கத்தும்பொழுது பால் கொடுக்க நேரமின்றி களை பிடுங்கிக்கொண்டிக்கும் மாதரின் நிலை என்ன? இவ்விதம் கஷ்டப்படும் வேறுநாடு கிடையாது. இந்நிலையில் சமஷ்டியைப் புகுத்தப் பார்க்கிறார்கள். இதைக்கிழித்து நெருப்பிலிடுவதற்காக, சுக்கு நூருக உடைத்தெறிவதற்கு காங்கிரஸ்காரர்கள் கச்சை கட்டிக்கொண்டிருக்கிறார்கள். இது கையையும், காலையும், மூளையையும் இறுக்கிப்பிடிக்க வருகின்றது. இந்த தேசியப் போர்க்கொடி யூனியன் ஜாக்கொடியைத் தணிக்கக்கூடிய கொடியென்பதை ருஜூச் செய்வதற்குக் கோடிக்கணக்கான மக்கள் இக் கொடியின்கீழ் ஐக்கியப்பட்டிருக்கிறார்கள். காங்கிரஸ்பதவி ஏற்றதன்காரணம், ஜஸ்டிஸ் கட்சி பதவியிலிருந்தால் ஏகாதிபத்தியத்திற்குத் தூண்மாதிரி யிருக்கும்—காங்கிரஸ் இருந்தால் காங்கிரசுக்கு இதுவரை இருந்துவந்த தடைச்சட்டங்களை நீக்கலாம். இனியும் மேலும் மேலும் ஏற்படுத்தாது தடுக்கலாம். அங்கேயே ஏகாதிபத்தியத்திற்குக் குழியும் தோண்டலாம். ரூபாயில் இரண்டணுக் கிடைப்பதையும் ஜஸ்டிஸ் கட்சிபோல் டிபார்ட்டிகளிலும், பந்துமித்திரர்களுக்கும் செலவுசெய்யாது பொதுஜன நன்மைக்காகச் செலவு செய்யலாம் என்பதற்காகும். சமஷ்டி என்பது கூட்டு என்பதாகும். அதாவது 563 சுதேசஇந்தியா—பிரிட்டிஷ் இந்தியா இரண்டையும் ஒன்று சேர்த்து ஆளுதல். மத்திய அசெம்பிளியிலும்கூட பெடரல் ரயில்வேயிலிருந்துவரும் (80,00,00,000) எண்பதுகோடி ரூ. சம்பந்தமான பேச்சுக்களாவது ரூபாய் அணு, பைசா விஷயமான பேச்சுக்களாவது பேசக்கூடாது. ஆனால் லண்டனிலுள்ள ஒரு டிக் அல்லது டாம் பேச அதிகாரம் உண்டு—பொக்கிஷத்தை நீ வைத்துக்கொள்-ராணுவத்தை என்வசம் விடு என்று கேட்டால் அதற்கு பயம். ஏனென்றால் பட்டாளத்தை வைத்துக்கொண்டு பொக்கிஷத்தையும் என் கையில் ஒப்பித்துவிட்டு—சீமைக்கு ஒடு என்று மிரட்டிவிடுவோ மென்பதாகும். இங்கிலாந்தின் வருவாயில் 1560ல் ஒரு பாகம் இப்பொழுது இங்கிலாந்தின் அரசனுயிருக்கும் ஆருவது ஜார்ஜ் எடுத்துக் கொள்கிறார். ஆனால் சுதேசமன்னர்கள் வெள்ளைக்காரரைக்காட்டிலும் கொள்ளைக்காராக இருக்கிறார்கள் தேர்தல்கால வாக்குறுதிகளை நிறைவேற்றவேண்டும். உள்ளிருந்து வேலைசெய்யும் காங்கிரஸ்காரர்களுக்கு என்னைப்போலும் உங்களைப்போலும் தேவரைப்போலும் உள்ளவர்கள்

(11-ம் பக்கம் பார்க்க)







## ஆங்கிலோ இந்தியர்-பிராமணர் விவாகம்

மிஸ் ஜோஸபைன் அன்டாயினட் மில்ஸ் என்ற ஆங்கிலோ இந்தியப் பெண் (கோயம்புத்தூர் கவர்ன் மெண்டுஆஸ்பத்திரி நர்ஸ்) இந்து மதத்தைத் தழுவி, சகுந்தலாதேவி யென்ற பெயருடன், கருணுகர குமார் சாட்டர்ஜீ என்ற ப்ராமண யுவரை மணந்து கொண்டார். சடங்குகள் ஆரிய சமாஜ முறைப்படி நடத்தப்பட்டன.

### சிறையிலிருந்து தப்பினுன்

கிளியூர் கிராமத்தில் (இளையான்குடி ஸ்டேஷன் எல்லைக்குட்பட்டது) மாடு திருடியதற்காகக் குற்றஞ் சாட்டப்பட்டிருந்த ஆண்டிக்குடும்பன் ராமநாதபுரம் சப் ஜெயிலிலிருந்து ஜனவரி 3உ தப்பி ஓடிவிட்டதாயும், போலீஸார் தேடிவருவதாயும் தெரிகிறது.

### ஸர் அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர்

பெரேல் கோர்ட்டு ஜட்ஜ் கனம் எம். ஆர். ஜெயகர் பிரிவி கவுன்ஸில் மெம்பராக நியமிக்கப்பட்டநிமித்தம் ஏற்பட்ட காலி ஸ்தானத்தில், சென்னை அட்வகேட் ஜெனரல் ஸர் அல்லாடி கிருஷ்ணசாமி ஐயர் பெடரல் கோர்ட் ஜட்ஜாக நியமிக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

### மலேயாவில் இந்தியர் நிலை

மலேயாவில் குடியேறியுள்ள இந்தியர் நிலைமை பற்றி, தொழில் கன்ட்ரோலர் வெளியிட்டுள்ள அறிக்கையில் அடியில் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:—

உத்தேசம் $2\frac{1}{2}$ கோடி ரூபாய் விலை பெறுமானமுள்ள 35,000 ஏகரா நிலத்தை இப்பொழுது மலேயாவில் இந்தியர்கள் வைத்துக் கொண்டிருக்கின்றனர்.

இந்தியர்கள் சம்பந்தமாக முன்னைவிட அதிகக் குறைவான கல்வியும், உதவியுமே தேவையா யிருக்கின்றன.

தமிழர்கள் குடியிருக்கும் பாகன் சிரைன் எனும் காலனி மிகப்பழமையானது. அதில் வசிக்கும் எல்லோரும் மலேயாவிலேயே பிறந்தவர்கள். தாய் நாடு சென்றதில்லை. 400 ஜனத்தொகை கொண்ட இக்காலனிக்கு 600 எக்கர் நிலமிருக்கிறது. அவர்கள் தங்களுடைய நிலத்தைத் தாங்களே உழுது சாகுபடி செய்கிறார்கள்.

### கள்ளிலிருந்து சர்க்கரை

கள்ளிலிருந்து சர்க்கரை செய்யும் முறையை இலங்கை சர்க்கார் வியாபார—கைத்தொழில் இலாகா கண்டுபிடித்திருக்கிறது. தற்சமயம் கள்ளின் விலை அதிகரித்திருப்பதால். சர்க்கரையை லாபகரமாகச் செய்ய முடியவில்லையாம்.

### ராஷ்டிரபதியின் தென்னுட்டு விஜயம்

ராஷ்டிரபதி ஸ்ரீ சுபாஷ்சந்திர போஸ், பிப்ரவரி மாதம் முதல் வாரத்தில் தமது தென்னுட்டு சுற்றுப் பிரயாணத்தை ஆரம்பிப்பாரென்று தெரிகிறது.

## ஸ்ரீ ராமன் மேனனுக்கு அனுதாபம்

சென்னை கோர்ட்டுச் சிறை மந்திரி ஸ்ரீ ராமன்மேனன் காலஞ்சென்றதற்கு அனுதாபம் தெரிவிக்கப் பல ஊர்களிலும் பொதுக் கூட்டங்கள் நிகழ்ந்திருக்கின்றன.

அரியக்குடி:—மகாத்மா வாசகசாலைக் கட்டிடத்தில் ஜனவரி 5-உ மாலை 6 மணிக்கு திரு. ராம. லெ. ராமசாமி செட்டியாரவர்கள் தலைமையில் ஒரு அனுதாபக் கூட்டம் நடந்தது. காலஞ்சென்ற ஸ்ரீ ராமன் மேனன் நாட்டுக்குச் செய்துள்ள தொண்டுகளைப்பற்றிப் பலர் பேசியபின் ஓர் அனுதாபத் தீர்மானம் நிறைவேறியது.

ஓ. சிறுவயல்:— கமலாநேரு சங்கத்தில் ஸ்ரீமான் வெ. அ. சித. நடராஜன் அவர்கள் தலைமையில் ஜனவரி 5உ மாலை நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் ஒரு அனுதாபத் தீர்மானம் நிறைவேறியது.

சேதுரெகுநாதபட்டணம்:— பொதுஜன சேவா சங்கத்தில் ஜனவரி 5உ இரவு ஸ்ரீ எஸ். நித்திலன் தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் ஒரு அனுதாபத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

கோயிலூர்:—ஜனவரி 6உ ஸ்ரீ சி. முத்தையாக் கோன் அவர்கள் தலைமையில் மௌன ஊர்வலமும் பொதுக் கூட்டமும் நடைபெற்றன.

உலகன்பட்டி.—ஜனவரி 8உ நடைபெற்ற கிராமக் காங்கிரஸ் கமிட்டி நிர்வாகக் கூட்டத்தில் ஒரு அனுதாபத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

பாகனேரி:—தனவைசிய இளைஞர் தமிழ்ச சங்கச் சார்பிலும், விவேகானந்தா சாரண இயக்கச் சார்பிலும், திரு. வெ. வெ. கரு. சாத்தப்ப செட்டியாரவர்கள் தலைமையில் ஒரு அனுதாபக் கூட்டம் நடைபெற்றது.

காளையார் கோயில்:—ஜனவரி 7 தேதி ஆரம்ப ஆசிரியர் சங்கக் கூட்டம், ஆண் பாடசாலையில் சிவகெங்கை ரேஞ்சு டிப்டி இன்ஸ்பெக்டர் ஸ்ரீ டி. எஸ். கல்யாணசுந்தரம் பிள்ளை அவர்கள் தலைமையில் நடைபெற்றதில் ஓர் அனுதாபத் தீர்மானம் நிறைவேறியது.

அலவாக்கோட்டை:— ஜனவரி 7உ மாலை 5 மணிக்கு ஸ்ரீ பி. கே. ராமசுப்பு பிள்ளை தலைமையில் காங்கிரஸ் ஆபீசிலிருந்து ஊர்வலம் புறப்பட்டு யதீந்திரர் மைதானம்வந்து அங்கு ஸ்ரீ பெரி. சோலைக்குட்டி அம்பலம் அவர்கள் தலைமையில் பொதுக் கூட்டம் நடைபெற்றது. கனம் மேனேன் அவர்களின் அகாலமரணங் குறித்து அனுதாபத் தீர்மானம் நிறைவேறியது

திருப்பத்தூர்:—ஜனவரி 5உ மாலை 5 மணிக்கு அஸாத் மைதானத்தில் ஸ்ரீ கே. அய்யாவு அம்பலம் தலைமையில் நடைபெற்ற அனுதாபக் கூட்டத்தில் ஸ்ரீ ராமன் மேனனுடைய சிறந்த குணுதிசயங்களையும் தியாகத்தையும் சிறப்பித்து பலர்பேசியபின், ஒரு அனுதாபத் தீர்மானம் நிறைவேறியது.

### தேவகோட்டை நகரசபை.

(நமது நிருபர்)

தேவகோட்டை நகர சபையின் ஸ்பெஷல் மீட்டிங் ஜனவரி 6உ காலை 9மணிக்கு சேர்மென் ஸ்ரீ முத்து கரு. அரு. பழ. அருணசலம் செட்டியார் தலைமையில் நடைபெற்றது. அவ்வமயம் சென்னை மாகாண கோர்ட்டு ஜெயில் இலாகா மந்திரி கனம் ராமன் மேனேன் அகாலமரணம் குறித்து இக்கவுன்சில் வருந்துவதுடன் இக்கவுன்சிலின் ஆழ்ந்த அனுதாபத்தை அன்னருடைய குடும்பத்திற்குத் தெரிவித்துக்கொள்கிறது என்று தீர்மானிக்கப் பட்டு அதற்கு அறிகுறியாக முனிசிபல் ஆபீசும் முனிசிபல் சம்பந்தப்பட்ட பாடசாலைகளும் அன்று மூடப்பட்டன.





## மார்க்கநாதர் அவதூறு வழக்கு

(நமது நிருபர்)

தேவகோட்டை 6-1-39

தேவகோட்டை சப்கலெக்டர் கோர்ட்டில் திருப்பத்தூர் மெய்வழிச் சபையின் தலைவர் மார்க்கநாதர் ஷெயூர் தனலெக்ஷிமி பிரவின்மீது கொடுத்திருந்த மான நஷ்ட வழக்கு இன்று விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது.

பிரதிவாதி தரப்பில் சாக்ஷியாக காரைக்குடி ஸ்ரீதண்ணீர் மலையான் செட்டியார் விசாரிக்கப்பட்டபோது கூறியதாவது:—

"நானும் என் சம்சாரமும் தொலைப்பிரதேசத்திற்கு 1933ம் வருஷம் போயிருந்தோம். சுமார் 20, 25 ஊர்கள் சுற்றினோம். எனக்குப் பல இடங்களில வரவேற்புப் பத்திரம் வாசித்துக் கொடுத்தார்கள். என்னுடன் சொக்கலிங்கம் செட்டியார் என்று ஒருவர் வந்தார். மூவார் தனவைசிய வாலிப சங்கத்திலிருந்து எங்களுக்கு ஒரு வரவேற்புப் பத்திரம் வாசித்தளிக்கப்பட்டது அதில் "அன்பும், அறிவும், ஆற்றலும் நிறைந்த ஆண்டகைகாள்" என்று சொல்லியிருக்கிறது. (கண்ணுடிச் சட்டம்போடப்பட்ட ஷெபத்திரம் தாக்கல் செய்யப்பட்டது. அச்சங்கத்தின் சார்பாகஎடுக்கப்பட்ட புகைப்படம் ஒன்று கோர்ட்டில் தாக்கல் செய்வதற்காகக் கொண்டு வரப்பட்டது, காட்டப்பட்டது. ஆனுல் தாக்கல் செய்யப்படவில்லை) ஆண்டகை என்ற வார்த்தைக்குப்பொருள் (Courageous man) வீரத்தன்மை பொருந்தியவன் என்பதாகும். ஆண்டகை என்பது பொதுப்பெயர். நான் பிறந்ததும் காரைக்குடி இருந்துவருவதும் காரைக்குடியே. குறிப்பிட்டு ஒரு நபரை ஆண்டகை என்று சொல்வது எனக்குத் தெரியாது.

குறுக்கு விசாரணை:-எனக்கு சிஷ்யர்கள் இருக்கிறார்கள். ஆனுல் ஆஸ்ரமம் கிடையாது. நாங்கள் மத சம்பிரதாயத்தில் புகுவதில்லை. தன் "மனைவியை வெளியேற்றி பிறர் மனைவிமேல் இச்சைகொள்ளும்" என்பது எனக்குக் கிடையாது. பழம், புஷ்பம், காணிக்கை பிறரிடம் பறிப்பது என்னிடம் கிடையாது.

இத்துடன் சாக்ஷி விசாரணை நிறுத்திக் கொள்ளப்பட்டது. பிறகு 1வது எதிரி ஒரு ஸ்டேட்மெண்டு தாக்கல் செய்தார். அதன் சுருக்கமாவது:

"நான் செய்த பிரசங்கள் இவரைக் குறித்ததாகமாட்டா. இந்த ஆண்டகைதன்னைத்தான் குறிக்கின்றது என்று நினைத்துக் கொள்வாரேயானுல் அவர் அவ்விதம் நினைப்பதைக் குறித்து நான் வருந்துகிறேன்."

இந்த ஸ்டேட்மெண்டை வாதி வக்கீல் வாதியிடம் காட்டி அவர் ஒத்துக்கொண்டால் கேஸைவாபஸ் பெற்றுக்கொள்கின்றதென்றும் இல்லையேல் ஆர்குமெண்டு நடத்துகிறதென்றும் கூறியதன்மீது ஜனவரி மாதம் 11உயன்று தேவகோட்டைக் கோர்ட்டுக்கு ஒத்திவைக்கப்பட்டது.

### 11உ நடவடிக்கை

(நமது நிருபர்)

சென்ற புதன்கிழமை, தேவகோட்டை சப்கலக்டர் முன்பாக இந்த வழக்கு மீண்டும் விசாரணைக்கு வந்தது. 1-வது எதிரி கொடுத்த ஸ்டேட்மெண்டை வாதி ஒப்புக்கொள்ளாததால், இரு தரப்பு வக்கீல்களுடையவும் ஆர்குமெண்டு நடைபெற்றது. தீர்ப்புக்கு, 16உ தேவகோட்டையில் வாய்தா போடப்பட்டிருக்கிறது.

### இந்திய ரப்பர் ஏற்றுமதி

1937-26ல் இந்திய ரப்பர் ஏற்றுமதியின் அளவு 2 கோடி 14 லட்சம் ராத்தல். முந்தினவருஷம் 1 கோடி 96 லட்சம். இதில்

| | | |
|---|---|---|
| அமெரிக்காவுக்கு | 20 | சதமானம் |
| கிரேட் பிரிட்டனுக்கு | 42 | ,, |
| ஜர்மனிக்கு | 14 | ,, |
| ஸெக்குக்கு | 21 | ,, |
| இலங்கைக்கு | 0 | ,, |

பர்மாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டது இதில் உள்படவில்லை.

குமரன்

காரைக்குடி
வெகுதானிய-ஹு மார்கழி-மீ 28௳

## புள்ளி விவரம்.

லாகூர் விஞ்ஞான வாரத்தில் பல முக்கியமான மகாநாடுகள் நடைபெற்றன. இவற்றுள் குறிப்பிடத் தக்கது, இரண்டாவது இந்தியப் புள்ளி விவரங்கள் மகா நாடாகும். பஞ்சாப் கவர்னர் ஸர் ஹென்ரி கிரேய்க் இம்மகாநாட்டைத் திறந்து வைத்தார். இந்தியா கவர்ன்மெண்டின் பொருளாதார ஆலோசனை கர்த்தா டாக்டர் டி. இ. கிரகிரி தலைமை வகித்தார். முன் காலத்திலெல்லாம், புள்ளி விவரம் திரட்டும் வேலை, வரி வசூலிப்போருக்கு மட்டுமே மிக உபயோககரமாயிருந்தது. ஆனால் வெகு விரைவாக விஞ்ஞானத் துறையில் முன்னேற்றம் ஏற்பட்டுவரும் இக்காலத்தில் புள்ளி விவரம் சேகரிப்போருடைய உதவி எல்லாத் துறைகளுக்கும் தேவைப்பட்டு வருகின்றது கண்கூடு. வரவுக்குத் தக்க செலவிட்டு, குடும்பத்தை செட்டாகவும் கடனின்றியும் நடத்திச் செல்ல விரும்பும் ஒவ்வொருவருக்கும், அவரவர் வரவு செலவைப்பற்றிய புள்ளி விவரங்கள் மிகவும் பயன்படத் தக்கவையாகும். அதே போன்று, ஒரு தேசத்தின் நல்வாழ்வுக்கும் அவை மிக மிகத் தேவை யென்பதில் ஐயமில்லை.

புள்ளி விவரங்கள் இல்லாமற் போனால், மனிதன் இப்பரந்த உலகில் வீணே சஞ்சரிக்க வேண்டியதுதானென்றும், மனித சமூகத்தின் பல விதமான போக்கையும் நிதானிப்பதற்கு அது ஒன்றுதான் சிறந்த வழியென்றும், ஒவ்வொன்றின் புள்ளி விவரங்களையும் சேகரித்தால்தான் அதனதன் உண்மையான நிலை நன்கு புலப்படுமென்றும், வெறும் லட்சியங்களை மட்டும் வைத்துக்கொண்டு எதுவும் செய்யமுடியாதென்றும், மனித முயற்சிகள் அனைத்திற்கும் புள்ளி விவரங்களே ஆதாரமென்றும், பஞ்சாப் சர்க்கார் பொக்கிஷ மந்திரி ஸ்ரீ மனோஹர்லால் தமது வரவேற்புப் பிரசங்கத்தில் குறிப்பிட்டிருப்பது கவனிக்கத் தக்கது. சுருங்கச் சொன்னால், மனித நாகரீகத்தின் முற்போக்கிற்கு அளவு கருவியாக விளங்குவது புள்ளிவிவரந்தான்.

புள்ளி விவரங்கள் சேகரிப்பதன் அவசியத்தை சமீப காலத்தில் தான் ஜனங்கள் உணர்ந்து வருகின்றார்கள். சர்க்காருக்கு அவ்விஷயத்தில் அதிகப் பொறுப்பு இருக்கிறதென்பதை மகாநாட்டுத் தலைவர் தமது உரையில் நன்கு விளக்கியிருக்கிறார். புள்ளி விவரங்கள் திரட்டுவோருக்கு சர்க்கார் போதிய வசதிகளைச் செய்து கொடுக்கவேண்டுமென்றும், அவர்களுடைய ஊழியத்தை நன்கு பயன்படுத்தி ஊக்குவிக்க வேண்டுமென்றும், இத்துறையில் பயிற்சியளிப்பதற்கு வழிகாண வேண்டுமென்றும் அவர் கூறியிருப்பது கவனிக்கத் தக்கதாகும்.

வியாபார விஷயத்தில், புள்ளிக் கணக்கு எவ்வளவு முக்கியமானதென்பது யாவருமறிந்ததே. பல தேசங்களும் ஏற்றுமதி, இறக்குமதி முதலிய வற்றால் சம்பந்தப்பட்டிருப்பதால், அந்தந்த நாட்டு ஏற்றுமதி, இறக்குமதி உற்பத்தி முதலிய சகல விவரங்களையும் சேகரிப்பது மிக மிக அவசியமாகும். நம் நாட்டில் என்னென்ன பொருள்கள் எவ்வளவு உற்பத்தியாகின்றன? நம் நாட்டின் தேவை எவ்வளவு? வெளிநாட்டுக்கு எவ்வளவு ஏற்றுமதியாகின்றது? உற்பத்தியை அதிகரிப்பது நல்லதா? குறைப்பது நல்லதா?— என்ற விஷயங்களில் ஒரு நன் முடிவுக்கு வரவேண்டுமானால், இது பற்றிய பூரணமான புள்ளி விவரங்கள் இன்றியமையாதன வன்றோ? மற்ற நாடுகளில், இத் துறையில் அதிக கவனஞ் செலுத்தப்பட்டு வருவதைக் காண்கின்றோம். நம் நாட்டிலும் அதே போன்று இத் துறையில் அக்கரை செலுத்த வேண்டியதன் அவசியத்தை லாகூரில் கூடிய இம் மகாநாடு வற்புறுத்துகின்றது.

சாதாரண மக்களுக்குப் புள்ளி விவரக் கணக்கு, உலகில் சகல துறைகளிலும் ஏற்பட்டுவரும் மாற்றத்தையும் அபிவிருத்தியையும் போதிப்பதற்கு ஒரு எளிதான வழியாகும். அது மட்டுமின்றி, மாற்றம் ஏற்படுவது இயற்கைதான் என்பதை, பாமர மக்களும் அறிந்து கொள்ளவும் இது பயன்படுமென்று மகாநாட்டுத் தலைவர் குறிப்பிட்டுள்ளார். கவர்ன்மெண்டார் போதிய கவனஞ்செலுத்தி, புள்ளிக் கணக்குகளைச் சரியான முறையில் தயாரிப்பதற்கான வசதிக ளனைத்தையும் செய்து இத்துறையில் மற்ற நாடுகளுக்குச் சமமான அபிவிருத்தி ஏற்படும்படி செய்ய இந்த மகாநாடு ஒரு தூண்டுகோலாக இருக்குமென்று நம்புகிறோம்.

---

### ஸ்ரீ ராமன் மேனனுக்கு அனுதாபம்

காரைக்குடி காந்தி சதுக்கத்தில், ஜனவரி 6௳ வெள்ளிக்கிழமை மாலை 6-30 மணிக்கு காங்கிரஸ் ஊழியர்களால் ஒரு அனுதாபக் கூட்டம் கூட்டப்பட்டது. ஸ்ரீ சா. கணேசன் தலைமை வகித்தார். காலஞ்சென்ற ஸ்ரீ ராமன் மேனனுடைய குணநிசபங்களையும், அவர் நாட்டுக்குச் செய்துள்ள ஊழியத்தையும், ஸ்ரீமான்கள் என்.ஆர். பத்மநாபன், கே. கன்னையா ஆகியோரும் சிறிது பேசியபின், தலைவர் அவர்களால் ஒரு அனுதாபத் திர்மானம் பிரேரிக்கப்பட்டு, எல்லோரும் எழுந்து நின்று நிறைவேறக் கூட்டம் முடிந்தது.

### தாகூர் வாசகசாலை காரைக்குடி

6—1—39 மாலை தலைவர் ஸ்ரீ கி. கோவிந்தராஜுலு தலைமையில் நடைபெற்ற அவசர நிர்வாகக் கழகக் கூட்டத்தில், நீதித்தல சிறைச்சாலை இலாகா மந்திரி கனம் ராமன் மேனன் அவர்கள் 3—1—39ல் மரணமடைந்தது குறித்து வருந்தி, தனது அனுதாபத்தை அவரது குடும்பத்தாருக்கும், சென்னை மந்திரி சபைக்கும் தெரிவித்துக் கொள்ளுகிறதென்ற தீர்மானம் சபையினர் அனைவரும் எழுந்து நின்று வணக்கம் தெரிவித்து நிறைவேற்றியது.

---

### முனிசிப்பல் கமிஷனர்

காரைக்குடி முனிஸிப்பல் கமிஷனராயிருந்தவர்க ஸ்ரீ எஸ். ராமதாஸ் நாயுடு, ஜனவரி 9௳ நகர சபைத் தலைவர் ஸ்ரீ ராய. சொக்கலிங்கன் வசம் சார்ஜ் ஒப்புவித்துவிட்டுத் திருநெல்வேலி சென்றார். ஸ்ரீ. டி. புருஷோத்தமம் 16௳ வந்து சார்ஜ் ஒப்புக் கொள்வாரென்று தெரிகிறது

---

### ஏழு வயதுச் சிறுமியின் ஜலதரங்கக் கச்சேரி

காரைக்குடி ஸ்ரீமான் சி. பழ. லெ. நாகப்ப செட்டியாரவர்களுக்கு நிகழும் மார்கழி 23௳ நடைபெற்ற சஷ்டி அப்த பூர்த்தி சாந்திக்கல்யாணத்தை முன்னிட்டு, சென்ற ஞாயிற்றுக்கிழமை மாலை 5-30மணிக்கு ஷையார் வீட்டில் உத்திரகோசமங்கை காமகோடிபாய் எனும் ஏழு வயதுச் சிறுமியின் இனிய ஜலதரங்கக் கச்சேரி நடைபெற்றது.

### மழை

சென்ற இரு தினங்களாக, வானங் கறுத்து, இடையிடையே தூற்றல் விழுந்துகொண்டிருக்கிறது.

## ரங்கூனில் அவசரச் சட்டம்

### பொங்கி மடங்கள் தீக்கிரை

அவசர சந்தர்ப்பங்களில், பொது ஜனங்களின் மோட்டார்களை போலீஸ் அல்லது ராணுவப் படையினரின் உபயோகத்துக்காக அமர்த்திக் கொள்ள அதிகாரமளிக்கும் அவசரச்சட்டத்தை கவர்னர் பிறப்பித்திருக்கிறார்.

### பஸ் வேலை நிறுத்தம்

இச்சட்டத்தைக் கண்டிக்க பர்மியருக்குச் சொந்தமான பஸ் டிரைவர்கள் ஜனவரி 5௳ காலை முதல் வேலை நிறுத்தம் செய்தனர். அன்று மாலை டிரைவர்களின் கூட்டமொன்று ரங்கூன் கோவில் ஒன்றில் நடைபெற்றது.

### பள்ளிகளைப் பகிஷ்கரிக்க

அகில பர்மா மாணவர் சங்கத்தலைவரைக் கைது செய்து தண்டித்ததையும் மாணவர்கள்மீது போலீசார் தடியடிப் பிரயோகம் நடத்தியதையும் கண்டிப்பதற் கறிகுறியாக, பள்ளிக்கூடங்களையும் கல்லூரிகளையும் பகிஷ்கரிப்பதென, மாணவர் சங்கக் கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

சென்றவாரம் ரங்கூனிலுள்ள மூன்று பொங்கிமடங்கள் தீப்பற்றி எரிந்துபோயின. நெருப்பணைக்கும் எஞ்சின்வந்து நெருப்பு பரவாமல் தடுத்தது. இது சம்பந்தமாக இரண்டுபேர் மீது வழக்குத் தொடரப்பட்டிருக்கிறது. எரிந்துபோன மடங்களின் சாம்பலுக்கடியில் ஒரு எலும்புக்கூடு காணப்பட்டதாம். இது ஒரு பௌத்த சந்யாசியுடையது என்று நம்பப்படுகிறது.

### பட்டினிப் பட்டாளம்

9௳ ரங்கூன் தெருக்களில் ராணுவப்பட்டாளம் பவனிவந்தது. எண்ணெய் கிணறுகளில் வேலை செய்பவர்கள் ஆயிரம் பேர்களும், இதர தொழில் சம்பந்தப்பட்டவர்கள் ஆயிரமும் ஆக இரண்டாயிரம் பேர்கொண்ட பட்டினிப் பட்டாளமொன்று தாட்டன் ஜில்லாவிலிருந்து ரங்கூன் வந்து சேர்ந்தது. பர்மா பர்மியருக்கே என்ற கோஷத்துடன் பதினாயிரம் பேர் கூடி இப்பட்டாளத்தை வரவேற்றனர்.

### டிராம் வேலைநிறுத்தம்

9௳ டிராம் வண்டிகளும் வேலை நிறுத்தத்தால் நின்று விட்டன.

### சட்ட சபை

பர்மா சட்டசபை பிப்ரவரி 9-ந் தேதிகூடும். மறியல் செய்த மாணவர்களை அடித்ததுபற்றி எதிர்க்கட்சியார் கண்டனத் தீர்மானம் கொண்டு வருவர்.

---

### சமஷ்டியின் செலவு

#### சம்பளம் குறைக்கப்படும்

1940-ம் வருஷத்தில் சமஷ்டி அரசியல் அனுஷ்டானத்துக்கு வருவதால் ஏற்படும் அதிகச் செலவை ஈடுசெய்ய, 500 ரூபாய்க்கு அதிகமாக உள்ள மாதச் சம்பளங்களைப் படிப்படியாகக் குறைக்க, அடுத்த வரவு செலவுத் திட்டத்தில்யோசனை கூறப்பட்டிருப்பதாக, 'ஸ்டார் ஆப் இந்தியா' பத்திரிகையில் ஒரு செய்தி வெளியாகி யிருக்கிறது.

---

### ஸர். பாட்ரிக் காடெல் ராஜினுமா

#### புதிய திவான் பதவியேற்றார்

ஸர் பாட்ரிக்காடெல் ராஜ்கோட் திவான்பதவியை ராஜினுமா செய்துவிட்டதாகத் தெரிகிறது. ராஜ்கோட் நிர்வாக சபை ஸீனியர் மெம்பர் ஸ்ரீ மாணிக்கலால் படேல் தற்காலிகமாகத் திவான் பதவியை ஏற்றிருக்கிறார்.

---

### பொப்பிலி ராஜா

சமீபத்தில் நடந்த ஜஸ்டிஸ்கட்சி மகாநாட்டுக்காரியங்கள் சிலவற்றைதான் அங்கீகரிக்காமையால், இப்போதுதான் எக்கட்சியையும் சேர்ந்தவரல்லவென்று தெரிவிப்பதாக, பொப்பிலி ராஜா அஸோஷியேடட் பிரஸ்மூலம் ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறார்.

## ஹரிஜன் காலனி காலி!

### பிசாசுக்குப் பயந்து ஓடிவந்தனராம்

(நமது நிருபர்)

காரைக்குடி தெற்கு டிவிஷனைச் சேர்ந்த முனிஸிபல் கூலிகளுக்கு, காரைக்குடி தேவகோட்டை ரஸ்தாவில் முனிஸிபாலிட்டியாரால் கட்டிவிடப்பட்டிருக்கும் காலனியில் வசித்து வந்தவர்கள் எல்லோரும் பிசாசு பயத்தால், அந்த இடத்தை விட்டு விட்டு, ஊருக்குள் குடியேறி விட்டதாகத் தெரிகிறது. அவ்வாறு குடியேறிய கூலிகளில் சிலரை விசாரித்ததில், இரண்டு மூன்று மாதங்கட்குள் மூன்று நான்கு பேர் இறந்துபோனதாகவும், பூரண கர்ப்பம் சிதைவுற்றதாகவும், ஒரு நாள் ஒரு ஸ்திரீயை 'முனி' ஸ்டேஷன் வரைக்கும் கூட்டிச் சென்று விட்டதாகவும், மற்றும் பிறந்த குழந்தையொன்றும், தாயும், மிகவும் அபாயகரமான நிலையில், காரைக்குடி நகருக்கு தூக்கிவரப்பட்டனரென்றும், அப்படி தூக்கிவராவிட்டால், முனியய்யாவின் சேஷ்டையால் அவர்களும் இறந்து போயிருப்பார்களென்றும், நோடாங்கி கோட்டதில், அது கோட்டை முனி விளையாடுமிட மென்றும், அந்த இடத்தில் இருந்தால் இப்படித்தான் ஏற்படும் என்றும் சொல்லப்பட்டதாகவும் தெரிவிக்கப் பட்டது.

மேலும், சமைக்கப்படும் உணவுகள், முனியய்யாவின் சேஷ்டையால், கொஞ்சம்கூட ருசி அற்றிருப்பதாகவும், முநம் அருள்வாங்கிப்போயிற்றென்றும் கூறப்பட்டது.

---

### திருவிதாங்கூர் வழக்கு வாபீஸ்

மகாராஜாவுக்குத் திருவிதாங்கூர் சமஸ்தான காங்கிரஸ் காரியக் கமிட்டி சமர்ப்பித்த மகஜரில் கையொப்பமிட்டிருந்தவர்கள் பேரில் சர்க்கார் தொடுத்திருந்த வழக்கு வாபீஸ் வாங்கிக்கொள்ளப் பட்டது.

---

### 'விடுதலை' வழக்கு

#### தலா ஆறுமாதக் கடுங்காவல்

'விடுதலை' பத்திரிகை ஆசிரியர், பிரசுரகர்த்தா மீது நடைபெற்று வந்த வழக்கில் ஜனவரி 9௳ கோயமுத்தூர் அடிஷனல் செஷன்ஸ் ஜட்ஜ் தீர்ப்புக் கூறினர். ராஜத் துவேஷக் குற்றத்தில் இருவரையும் விடுதலை செய்துவிட்டு, வகுப்புத் துவேஷத்தை உண்டுபண்ணியதாகவுள்ள குற்றத்திற்கு இருவருக்கும் தலா 6 மாத வெறுங்காவல் தண்டனை விதித்தார். சர்க்கார் உத்தரவு வரும் வரை 'ஏ' வகுப்புக் கைதியாக இருவரையும் வைக்கும்படி சிபார்சு செய்தார்.

---

### காசி சர்வகலாசாலைக்கு ஒரு லட்சம்

#### நிஜாமின் நன்கொடை

காசி ஹிந்து சர்வ கலாசாலையில் இந்திய கலை ஞான போதனைக்கு ஏற்பாடு செய்ய, ஹைதராபாத் நிஜாம் ஒரு லட்ச ரூபாய் நன்கொடையளித்துள்ளார்.

---

### திரிபுரம் ராஜா நன்கொடை

சாந்திநிகேதனம், விசுவபாரதி சங்கீத பவனத்திற்கு 20,000 ரூபாய் நன்கொடை யளிப்பதாக திரிபுரம் ராஜா வாக்களித்திருக்கிறார்.

---

### தொங்காபுக்கேட்டில் பிரிவு உபசார விருந்து

இவ்வூர் திருவாளர் தெ. நா. ராம. மெய்யப்ப செட்டியாரவர்கள் தாய் செல்வதை முன்னிட்டு பல நண்பர்கள் சார்பில் 1938ஹு டிசம்பர்மீ 31௳ நான்கு மணிக்கு, ஒரு உபசார விருந்து நடத்தப்பெற்றது. விருந்தினருக்கு மாலைகளணிவிக்கப் பெற்றன. பல நண்பர்கள் விருந்தினரைப் பாராட்டிப் பேசினர்.



## அடுத்த காங்கிரஸ்

### வைத்தியசாலைகள் அமைக்க ஏற்பாடு

திரிபுரம் காங்கிரஸுக்காக நகர நிர்மாண வேலை கொஞ்சம் கொஞ்சமாக அபிவிருத்தியடைந்து வருகிறது. காங்கிரஸ் நகரில் ஏற்படுத்தவிருக்கும் ஆஸ்பத்திரிக்கு இந்தியரால் நடத்தப்படும் ரஸாயனக் கம்பெனி, வங்காள கெமிகல் பர்மெடிகல் வொர்க்ஸ் போதுமான மருந்துகளை இலவசமாக அனுப்பி யிருக்கிறது. காங்கிரஸ் நகரில் இலவசமாக ஒரு ஆஸ்பத்திரி நடத்த ஸ்ரீ மனோரஞ்சன குப்தா ஏற்பாடு செய்திருக்கிறார். இங்கு தீவிரமாக டாக்டர்களும் நர்ஸுகளும் ஊழியம் புரிவர். அவசரத்துக்காக ரயில்வே அதிகாரிகள் தென் மஹாராஷ்டிர ரயில்வே ஸ்டேஷனில் ஒரு வைத்தியசாலை ஏற்படுத்த முயற்சி செய்து வருகின்றனர். இங்கு பத்துப் பேர்கள் தங்கியிருந்து சிகிச்சைபெற வசதி அளிக்கப்படும்.

அலகாபாத் இந்திய அச்சுக்கூடக் கம்பெனியார் காங்கிரஸ் வேலைகள் அவ்வப்போது அச்சாகப் போதிய வேலை செய்திருக்கின்றனர். வியாபாரிகளுக்கு உதவியாக ஒரு டைரக்டரி வெளியிடவும் உத்தேசமிருக்கிறது. ஜபல்பூர் ஜில்லா போர்டு தலைவர் பண்டிக காசிப் பிரசாத் பாண்டே ஜில்லாவிலுள்ள கல்வி ஸ்தாபனங்களை 15 நாளைக்கு மூடிவிட உத்தரவு பிறப்பித்திருக்கிறார்.

காங்கிரஸ் நகருக்கு ஒரு மைல் தூரத்திலுள்ள இடம் யாவும் காங்கிரஸுக்கே சொந்தமாகையால் அந்த எல்லைக்குள் கடைகளையோ, வீடுகளையோ உபசரணைக் கமிட்டி உத்தரவின்றிக் கட்டக் கூடாதென ஜபல்பூர் டிவிஷன் கமிஷனர் அறிவித்திருக்கிறார்.

---

## நோட்டீஸ்.

மதுரையிலிருக்கும்
ராமநாதபுரம் அபிஷியல் ரிஸீவர்
கோர்ட்டு.
S. C. No. 67 of 1934.
(I. P. No. 26 of 1934 சப்கோர்ட்டு, தேவகோட்டை)

கோட்டையூர் எம். டி. ஏ. நாராயணன் செட்டியார் } இன்சால் வெண்டு

ஷை இன்சால்வெண்டுக்குப் பாத்தியப்பட்டு நம்மிடம் வெஸ்ட்டாகி இருக்கிற கோட்டையூர் கிராமத்தில் உள்ள 1, 2, 4, 5 லக்க சொத்துக்களை நாளது 1939ஹு ஜனவரிமீ 18௳ இதனடியில் கையொப்ப மிட்டவர்களால் மதுரை திருமல் நாயக்கர் மஹாலிலிருக்கும் ஷை ஆபீஸில் பஹிரங்கமாக ஏலம் போடப்படும். ஷை சொத்துக்களை கோட்டையூர் கே. வி. ஏ. எல். எம். ராமனுதன் செட்டியார் என்பவர் முறையே ரூ. 350, 650, 200, 1000 க்கு ஏலத்தில் கேட்டிருக்கிறார். ஷை உயில் எவரும் மேல் கேட்காவிடில் அவருக்கே முடிவு செய்யப்படும்.

ஏலக் கண்டிஷன்களும் இதர விஷயங்களும் ஷை ஆபீஸில் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்.

ஆர். கிருஷ்ணய்யர்,
அபிஷியல் ரிஸீவர்.
10—1—39

## திரிபுரா காங்கிரஸ் பிரதிநிதிகள் தேர்தல்

### காரைக்குடி தேர்தல் ஒத்திவைக்கப்பட்டது

#### வெற்றி பெற்றோர் விவரம்

திரிபுராக் காங்கிரஸ் பிரதிநிதி தேர்தல் சென்ற ஞாயிற்றுக்கிழமை நடைபெற்றது. காரைக்குடி ஜில்லாவில் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்ட 9 தொகுதிகளின் பிரதிநிதிகளின் விவரம் சென்றவாரம் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. சிவகெங்கைத் தாலுகாவிலுள்ள நாலு தொகுதிகளிலும் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப் பட்டோர் விவரம் அடியில் வருமாறு:-

நாமனூர் தொகுதி: திரு கா. கண. க. வே. வேலாயுதம் செட்டியார்.

சிவகெங்கை தொகுதி: திரு கா: வெ. சேதுராமச்சந்திரன்.

சொக்கநாதபுரம் தொகுதி: திரு ஆர். வி. சாமிநாதன்.

நாட்டரசன்கோட்டைத் தொகுதி: திரு சி. உ. சுப. உடையப்பா.

அடியில் கண்ட தொகுதிகளில் 8-1-39ல் நடைபெற்ற தேர்தலில் வெற்றிபெற்றோர் விவரம் வருமாறு:—

கோத்தமங்கலம் தொகுதி: (ஓட்டுகள்)

| | |
|---|---|
| லெ. நடேசன் | 319 |
| டி. ஆர். குருஸாமி | 291 |
| செல்லுபடியாகாதவை | 21 |

ஸ்ரீ. லெ. நடேசன் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

கோவிலூர் தொகுதி:

| | |
|---|---|
| அபிசீனியா பழ.நாச்சியப்பன் | 392 |
| என். எஸ். கணபதி | 349 |
| செல்லுபடியாகாதவை | 39 |

ஸ்ரீ அபிசீனியா பழ. நாச்சியப்பன் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

திருப்பத்தூர் தொகுதி:

| | |
|---|---|
| கிட்டு ஐயர் | 302 |
| வீர. சுப்பையாபிள்ளை | 96 |
| செல்லுபடியாகாதவை | 11 |

ஸ்ரீ கிட்டு ஐயர் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

#### காரைக்குடி தேர்தல்

காரைக்குடி நகரத் தொகுதிக் குரிய ஒரு ஸ்தானத்துக்கு 8-1-39ல், யஸ். யம். யஸ். ஹைஸ்கூலில் தேர்தல் நடத்த ஏற்பாடாகி யிருந்தது. இந்தத் தொகுதியில்போட்டியிட்டோர் மூவர்: ஸ்ரீமான்களான டாக்டர் எஸ். சுப்பிரமணியம், ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார், ராய. சொக்கலிங்கன். மூவருக்கும் வேலை செய்யச் சுமார் முப்பது கார்கள் வந்திருந்தன. ஆனால் குறித்த சமயத்தில் போலிங் ஆபீஸரோ, தேர்தல் அதிகாரியோ வரவில்லை. சுமார் 8-45 மணிக்குத் தான் தேர்தல் அதிகாரி ஸ்ரீ ஒ. வி. அழகேசன் வந்து சேர்ந்தார். குறித்த சமயம் தவறி விட்டபடியால், தேர்தலை ஒத்திவைக்க வேண்டுமென்றனர் ஒரு சாரார். தாமதப்பட்ட சமயத்தைப் பின்னால் நீட்டிக் கொள்ளலாம் என்றனர் இன்னொரு சாரார். ஹைஸ்கூலுக்குள் பெருங் கூட்டம் கூடிவிட்டது. தேர்தல் அதிகாரி எழுந்து பேச ஆரம்பித்தபோது ஏகக் கூச்சல் போட்டு, பேசவிடாது தடுத்தனர். கும்பிச்சி ஒழிக என்றகோஷமிடப்பட்டது. கடைசியில் தேர்தல் ஒத்தி வைக்கப்பட்டது.

#### தேர்தல் அதிகாரி அறிக்கை

காரைக்குடி தேர்தல் ஒத்திவைக்கப் பட்டது சம்பந்தமாக, தேர்தல் அதிகாரி ஸ்ரீ ஒ. வி. அழகேசன் அடியில் வருமாறு அறிவிக்கிறார்:—

காரைக்குடி நகரத்தில் ஒரு ஸ்தானத்திற்கு தேர்தல், தேர்தல் அதிகாரியும் போலிங் ஆபீசர்களும் குறிப்பிட்ட நேரத்திற்கு 45 நிமிஷம் தாமதமாக போலிங் நடக்கும் இடத்திற்கு வந்தார்கள் என்ற காரணத்திற்காக போட்டியிட்ட திருவாளர்களான டாக்டர் எஸ். சுப்பிரமணியம், ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார், ராய. சொக்கலிங்கன், மூன்று பேர்களில் திருவாளர்களான டாக்டர் சுப்பிரமணியம், ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார் இருவர்களும் தேர்தலை வேறு தினத்திற்கு ஒத்திபோடவேண்டுமென்று, ஆக்ஷேபணை செய்தார்கள். திரு ராய. சொக்கலிங்கன் 45 நிமிஷ நேரத்தை மத்தியானத்திலும் சாயந்திரத்திலும் தொடர்ந்து தேர்தலை நடத்தி நேரக் குறைவை ஈடு செய்துவிடலாமென்று சொன்னார்கள். கூடியிருந்தவர்கள் பலவிதமாகப்பேசினர்கள். முடிவாக வேறு ஒரு தினத்திற்குத் தேர்தல் ஒத்திவைக்கப்பட்டது.



## தந்திச் செய்தி

### சென்னை மார்க்கெட்

சென்னை, ஜன. 10௳

| | | | |
|---|---|---|---|
| பம்பாய் ஆலைத்தங்கம் | 37 | 1 | 9 |
| ஷை வாப்பு | 37 | 4 | 6 |
| பூவா தோலா 1-க்கு | 36 | 11 | 0 |
| சவரன் மொத்தம் | 23 | 14 | 6 |
| ஷை சில்லரை | 23 | 14 | 9 |
| வெள்ளி 100 ரூ. எடை | 52 | 13 | 0 |
| ஷை சில்லரை | 0 | 8 | 9 |

### லண்டன் மார்க்கெட்

லண்டன் ஜன. 9௳

ரப்பர் பிளை ராத்தல் ஒன்றுக்கு எட்டே விசம் பென்ஸ்

### சிங்கப்பூர் மார்க்கட்

சிங்கப்பூர், ஜன. 9௳

ரப்பர் பிக்கல் ஒன்றுக்கு 37 வெள்ளி

### கொழும்பு மார்க்கெட்

கொழும்பு ஜன 9௳

| | | |
|---|---|---|
| கிரேப் ரப்பர் | 48 | சதம் |
| ஷை கூப்பன் | 31¼ | ,, |
| ஷை டீ. கூப்பன் | 48¼ | ,, |

### கொப்பரா

கொப்பரா முதல் தரம் ரூ. 29.75

### ஆங்கிலோ இந்தியர்

#### காங்கிரஸில் சேர விருப்பம்.

ஆங்கிலோ இந்தியரிற் பலர் காங்கிரஸில் சேர விரும்புவதாயும், ஆங்கிலோ இந்திய காங்கிரஸ் கமிட்டி என்ற பெயரில் கல்கத்தாவில் தனி டிவிஷனும் தனித் தொகுதியும் ஏற்படுத்த வேண்டுமென்றும் ஆங்கிலோ இந்திய பிரஜா உரிமை சங்க காரியதரிசி, வங்காள மாகாண காங்கிரஸ் கமிட்டிக்கு எழுதியிருக்கிறார்.

### பிரதம மந்திரிக்குப் போட்டியில்லை

வரப்போகும் திரிபுரா காங்கிரசுக்கு பிரதிநிதியாக ராசிபுரம் தாலுகாவிலிருந்து சென்னை பிரதம மந்திரி கனம் ஸி. ராஜகோபாலாச்சாரியார் போட்டியின்றி தேர்ந்தெடுக்கப்பட்டார்.

---

### கோத்தமங்கலம் தொகுதி வாக்காளர்கட்கு

8-1-39ல் நடைபெற்ற திரிபுரா காங்கிரஸ் பிரதிநிதி தேர்தலில் எனக்கு அதிகப்படியான வாக்குகள் அளித்து என்னை வெற்றிபெறச்செய்த வாக்காளர்கட்கு எனது மனப்பூர்வமான வந்தனத்தையும், நன்றியறிதலையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

—லெ. நடேசன்

### நன்றி

8-1-39ல் நடந்த கோவிலூர் தொகுதி திரிபுரா காங்கிரஸ் பிரதிநிதி தேர்தலில் பெரும்பான்மையான வாக்குகளை எனக்களித்து என்னை பிரதிநிதியாகத் தேர்ந்தெடுத்த வாக்காளர்கட்கும் என் பொருட்டு ஆதரவுடன் ஒத்துழைத்த நண்பர்களுக்கும், சொக்கேசன்தல், ஆத்தங்குடி, பலவான்குடி, மானகிரி, கூத்தனூர், ஒ. சிறுவயல், அரியக்குடி, கோவிலூர், வ. சூரக்குடி முதலிய ஊர்களில் எனக்காக தங்களது அரிய வேலைகளுக்கிடையே பெரும் பொறுப்பு ஏற்றுக்கொண்டு தேர்தலில் எனக்கு உதவி புரிந்த நண்பர்களுக்கும் தனித்தனியே கடிதம் எழுதுவது சாத்தியமில்லை ஆதலால் இப்பத்திரிகைமூலம் எனது வந்தனத்தையும், நன்றியையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

—அபிஸீனியா நாச்சியப்பன்

சினிமாக் கதை.

## வாலிபர் சங்கம்.

காதலில்லாமல் கல்யாணம் செய்யக் கூடாது. இந்தக் கொள்கையைப் பரப்புவதற்காக ஏற்பட்டது வாலிபர் சங்கம். ஏற்படுத்தியவர் சுந்திரமும் கமலாவும். இருவரும் இரண்டு மில் முதலாளிகளின் குழந்தைகள். சங்க வேலையில் தீவிரமாக ஈடுபட்ட இருவரும், இணைபிரியா நட்புக்கொண்டு முடிவில் காதலர்களாகி விட்டனர். ஏற்கனவே, (இவர்கள் சந்தித்துக் காதல் கொள்ளுமுன்) இவர்கள் பெற்றோர் இருவருக்கும் மணமுடிக்கத் தீர்மானித் திருந்தனராம். ஆகவே பின்னர் தாங்கள் இயற்கையாகக் காதலித்தபோதிலும், மண முடிக்க முடியாமல் சங்கக் கொள்கை குறுக்கிட்டது. முடிவில், சுந்திரத்தின் சகோதரி ருக்மணி, சங்கத்தைத் தன் வாக்குவன்மையால் கலைத்துவிடவே காதலர்கள் மணம் செய்து கொள்கின்றனர். இதனிடையில், கோபால் என்பவன், கமலாவைக் கட்டாயப்படுத்தி மணஞ் செய்துகொள்ளச் செய்த சூழ்ச்சிகள் ஒன்றும் பலிக்கவில்லை. இது தான் கதைச் சுருக்கம். பம்பாய் சாகர் மூவிடோன் தயாரித்துள்ள முதலாவது தமிழ் படம். மாதிரிமங்கலம் நடேசன் சுபத்ரா, லக்ஷ்மணன், ருக்மணி, கோபாலகிருஷ்ணன் முதலியோர் முக்கிய நடிகர்கள். ஏ. என் கல்யாணசுந்திரம் கதாசிரியரும், டைரக்டரும். 13-1-39 முதல் காரைக்குடி ஸ்ரீ கிருஷ்ணா டாக்கீஸில் காண்பிக்கப்படும்.

---

### ஒ. சிறுவயல் ஸ்ரீ பொன்னழகி அம்மன் கோவில்

#### தேவஸ்தான போர்டின் நோட்டீஸ்

ஒ. சிறுவயல் ஸ்ரீ பொன்னழகியம்மன் கோவிலும் அதற்குச் சொந்தமான தர்மங்களும் தேவஸ்தான பரிபாலனச் சட்டத்திற்கு உட்பட்டவையென்று ஏன் வெளியிடப்படாதென்பதற்கு மார்ச்சு 6ந் தேதிக்குள் காரணந் தெரிவிக்க வேண்டுமென, சென்னை ஹிந்துமத தேவஸ்தான சொத்து பரிபாலன போர்டார், ஷை கோவில் டிரஸ்டிக்கு நோட்டீஸ் அனுப்பியிருக்கின்றனர். காரணம் ஆடிட்டுக்குக் கணக்குகள் கொடுபடவில்லையென்றும், பட்ஜட்டும் சொத்துக்கள் ரிஜிஸ்டரும் இன்னும் சமர்ப்பிக்கப்படவில்லையென்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

---

### விவேகானந்தர் விழா

இலட்சுமிபுரம் உயர்திரு ந. சொ. அரு. அருணாசலம் செட்டியாரவர்கள் ஸ்தாபித்துள்ள சொக்கலிங்க வித்யாசாலையில் சாதாரண மார்கழி 25-ம் நாள் (10-1-39) விவேகானந்தாவிழா விமரிசையாய்க் கொண்டாடப்பெற்றது. வித்யாசாலைத் தலைமை ஆசிரியர் ஸ்ரீ கே. சுப்பிரமணியம் சுவாமிகளின் திவ்ய சரித்திரத்தை ம் அன்னார் புகழையும் விரித்துரைத்து விழாவை ஆரம்பித்துவைத்தனர். பின்னர் மாணவர்களும் உதவி ஆசிரியர் ஸ்ரீ எம். இராமனுதன் அவர்களும் "விவேகானந்தர், விவேகானந்தர் வீரமொழி" என்னும் பொருள்கள் பற்றிச் சொற்பெருக்காற்றினர்.

## இந்தியா - பர்மா ரயில்வே

### இரண்டு திட்டங்கள்

இந்தியாவையும் பர்மாவையும் இணைக்கும் ரயில்பாதை போடும் விஷயம் இந்தியா கவர்ன்மெண்டின் பரிசீலனையில் ஒரு அவசர விஷயமாக இருந்து வருவதாகத் தெரிகிறது. சீனாவுக்கும், பர்மாவுக்கும் நில சம்பந்தமிருப்பதால், இந்த ரயில்வே இணைப்பு ராணுவ விஷயத்தில் மிக முக்கியத்வம் வாய்ந்ததாக இருக்கிறது.

இதுபற்றி இரண்டு திட்டங்கள் முன் பரிசீலனை செய்யப்பட்டன. முதல் திட்டம், சிட்டகாங்கிலிருந்து அக்யாபுக்குப்போகும் கடற்கரை வழி பாதை போடுவது. இரண்டாவது ஹுகாங் பள்ளத்தாக்குவழி பாதை போடுவது. இப்பாதை அஸாமின் வடகிழக்கு மூலையை பர்மாவுடன் இணைக்கத்தக்கது.

அக்யாப் கடற்கரைப் பாதையை சர்க்கார் ஆதரித்தார்கள். சாதாரணமாகக் கடற்கரைவழி 49 மணி நேரம் ஆகிறது. இப்பாதை வழி பர்மா செல்ல 56 மணி நேரம் பிடிக்கும். மொத்தம் 580 மைல் புதிதாகப் பாதை போடவேண்டும்.

முதலாவது திட்டத்துக்கு ஏழரைக் கோடி செலவாகும். இதைப் பர்மா சர்க்கார் ஆதரித்தார்கள். இந்தப் பாதையில் 3500 அடி சுரங்கப் பாதை போடவேண்டும். இதற்கு மட்டும் 440 லட்ச ரூபாய் செலவாகும். முடிவில் இரு திட்டங்களும் கைவிடப்பட்டன. ஆனால், ராணுவ பிரச்னை முக்கியமாகும்போது, லாப பிரச்னை பின்னணிக்குச் சென்றுவிடு மல்லவா?

---

### கோனுப்பட்டு டோல்கேட் (A)

ஒ. சிறுவயல் 9—1—39 சொக்கலிங்கம் புதூர் ராம. நாகப்பா அவர்கள் தலைமையில் 8—1—39 மாலை 5மணிக்கு சொ. புதூரில் நடைபெற்ற டோல்கேட் விஷயமான கூட்டத்தில் குன்னக்குடி, ஒ. சிறுவயல், ஆத்தங்குடி, பலவான்குடி, சொ. புதூர் முதலிய 5 ஊர்களின் சார்பாக 60 அங்கத்தினர்கள் வந்திருந்தனர். சுங்க சம்பந்தமான அதிகாரிகளிடமும் குத்தகைக்காரரிடமும் இன்னம் பல முக்கியஸ்தர்களையும் கலந்து ஆலோசிக்க 5பேர்களடங்கிய சப் கமிட்டி நியமிக்கப்பெற்றதென்று ஸ்ரீ வெ. அ. சித. நடராஜன் அறிவிக்கிறார்.

---

### தேவகோட்டை மாணவர் சுற்றுப் பிரயாணம்

#### மஹாபலிபுரம் விஜயம்

செங்கற்பட்டு, ஜன 2—

தேவகோட்டை நகரத்தார் பாடசாலையைச் சேர்ந்த 70 மாணவர்களும் 10 ஆசிரியர்களும் அடங்கிய கோஷ்டியினர் தென்னிந்தியாவில் சுற்றுப்பிரயாணமாக காஞ்சிபுரம் வந்து அங்குள்ள பல கோயில்களைப் பார்வையிட்ட பின் சனிக்கிழமை தினம் இவ்வூருக்கு வந்து மஹாபலிபுரம், திருக்கழுக்குன்றம் முதலிய இடங்களுக்கு விஜயம் செய்தனர். பிறகு அன்றிரவே அவர்கள் விருத்தாசலத்திற்குச் சென்றனர்.

## சென்னைக்குப் புதிய கல்வி மந்திரி

### ஸ்ரீ வி. ஜே. வர்க்கி நியமனம்

கல்வி மந்திரியின் பார்லிமெண்டரிக் காரியதரிசியாயிருந்துவந்த ஸ்ரீ வி. ஜே. வர்க்கி, சென்னை சர்க்காரின் கல்வி மந்திரியாக நியமிக்கப்பட்டிருக்கிறார். கல்வி மந்திரியாயிருந்த கனம் டாக்டர் சுப்பராயன் நீதி, கோர்ட்டு, சிறைச்சாலை ஆகிய இலாக்காக்களின் மந்திரியாக நியமிக்கப்பட்டிருக்கிறார்.

புதிய மந்திரி கனம் வர்க்கி ஜனவரி 7உ பிற்பகல் கவர்ன்மெண்ட் ஹவுஸில் மே. த. கவர்னர் பிரபு முன்னிலையில் ராஜவிசுவாசப் பிரமாணம் செய்து மந்திரி பதவியை ஏற்றுக்கொண்டார்.

#### ஸ்ரீமான் வர்க்கி

எல்லா மாகாணங்களிலுமிருக்கும் மந்திரிகளில், ஸ்ரீமான் வர்க்கி ஒருவர்தான் இந்திய கத்தோலிக்கக் கிறிஸ்துவ மந்திரியாகும். இவர் தென் மலையாளத்தைச் சேர்ந்தவர். 1937 வரை மங்களூர் காலேஜில் புரொபஸராக இருந்தார். அந்த வருஷம் சட்ட சபைக்குத் தெரிந்தெடுக்கப்பட்டுப் பார்லிமெண்டரி காரியதரிசியானார். கிரீஸ், ரோம், ஐரோப்பா, இந்தியா தேச சரித்திரங்கள் பற்றி மாணவர்களுக்குப் பயன் தரும் புத்தகங்கள் பல எழுதியிருக்கிறார். கல்வித் துறையில் அதிக ஊழியம் புரிந்துள்ளார்.

---

### ராஜீய ஏஜண்டு கொலை

ஒரிஸா சமஸ்தானங்களின் ராஜீய ஏஜண்டான மேஜர் ஆர். எல். பஸல் கெட்டி ஜனவரி 5உ மாலை ரான்பூர் சமஸ்தான ராஜாவின் அரண்மனைக்கு வெளியே ஜனத்திரளால் கொல்லப்பட்டார். ரான்பூர் பிரஜா மண்டல மெம்பர்களில் சிலர் பக்கத்துக் கிராமத்தில் நடந்த களவு சம்பந்தமாகக் கைது செய்யப்பட்டதால், ரான்பூரில் பயங்கரமான நிலைமை ஏற்பட்டது. பிரஜா மண்டலம் சட்ட விரோதமானதென அறிவிக்கப்பட்டது. அரண்மனை முன் பெருஞ்ஜனத்திரள் கூடிநின்றது. ராஜீய ஏஜண்டு, ஜனத்திரளை எதிர்த்து நிற்க நேர்ந்தது. கலைந்து போகும்படி உத்திரவிட்டும் பலன் பெறவில்லை. கூட்டத்திலிருந்தோர் தடிகளை வைத்துக்கொண்டு பயமுறுத்தியதால், அவர் கைத்துப்பாக்கி யெடுத்துச் சுட்டார். ஜனக்கும்பல் ஆத்திரங்கொண்டு அவரைச் சூழ்ந்துகொண்டு படுகாயப்படுத்திக் கொன்றனர்.

மகாத்மா காந்தி, பண்டித ஜவஹர்லால், சுபாஷ் சந்திர போஸ் முதலிய தேசீயத் தலைவர்கள் பலரும் இக்கொடுஞ் செயலைக் கண்டித்துள்ளனர்.

---

மிஸ்டர் வி. ஜே. வார்க்கி கல்வி மந்திரியாக நியமிக்கப்பட்டதாலும், ஸ்ரீமான் K.R. சரந்த்ராஜிநாமாச்செய்ததாலும், உண்டான இரண்டு பார்லிமெண்டரிக் காரியதரிசிகளின் ஸ்தானங்களையும் பூர்த்திசெய்வதில்லை என்று சர்க்கார் தீர்மானித்திருப்பதாகத் தெரிகிறது. தற்போதைய செல்வ நிலையை உத்தேசித்தே இவ்விதம் முடிவு செய்திருப்பதாகத் தெரிகிறது.

## கோரமான மோட்டார் விபத்து

### கடியாபட்டி பிச்சப்ப செட்டியார் மரணம்

திருச்சி, ஜன 5—

நேற்று காலை 10-30 மணிக்கு சென்னையிலிருந்து கடியாபட்டி லேவாதேவிகடை ஸ்ரீமான் பிச்சப்ப செட்டியார் தமது மனைவி, பெண், சமையல்காரனுடன் தமதுசொந்தமோட்டாரில் வந்தார். மோட்டார் ஒரு புளியமரத்தில் அகஸ்மாத்தாய் மோதி செட்டியார் வெளியே தள்ளப்பட்டதில் மண்டையில் காயம் பலமாகப் பட்டு அதனால் அவர் உடனே இறந்தார். அவர்மனைவி வள்ளியம்மை ஆச்சிக்கும், மகள் ஸ்ரீமதி வெள்ளாச்சிக்கும்காலில்காயம். சமயல்காரன் சின்னையனுக்கு சொற்பகாயம். மூவரும் முதலில் பெரம்பலூர் ஆஸ்பத்திரியில் பிரதம சிகிச்சைபெற்று இன்று திருச்சி ஜில்லா ஆஸ்பத்திரிக்குக் கொண்டுவரப்பட்டனர். மோட்டார் ஓட்டுபவன் சுப்பையாதாஸ் முகத்தில் கண்ணாடி நொறுங்கியதால் காயம். அவர் இன்னும் பெரம்பலூர் ஆஸ்பத்திரியில் சிகிச்சைபெற்று வருகிறார். விபத்தின் விவரத்தையறிந்த காங்கிரஸ் பிரபலஸ்தரான ஸ்ரீமான் நடராஜ பிள்ளை ஸ்தலத்திற்குச் சென்று அவர்களுக்குத்தக்க உதவி செய்தார். சப் இன்ஸ்பெக்டர் முத்துசாமி பிள்ளை விசாரணை செய்து வருகிறார்.

---

### ஜெயங்கொண்டபுரம் சரோஜினி வாசகசாலை

ஜனவரி 9உ இரவு 8மணிக்கு ஸ்ரீ முரு. மெ. முருகப்ப செட்டியார் தலைமையில் மாதாந்தக்கூட்டம் நடைபெற்றது. அவ்வமயம் ராஜகோட்டில் பொறுப்பாட்சி ஏற்படுத்த உடன்பட்டதற்கு மன்னர் தாகூர் சாகிபு அவர்களைப் பாராட்டியும் பொறுப்பாட்சிக்கு இணங்கும்படி செய்த சர்தார் வல்லபாய் படேல் அவர்களைப் பாராட்டியும், சென்னை மாகாண கோர்ட் சிறைச்சாலை மந்திரி கனம் ராமன்மேனன் அகால மரண மடைந்ததற்கு அனுதாபம் தெரிவித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டது என காரியதர்சி அறிவிக்கிறார்.







## காங்கிரஸ் பதவியேற்றதின் நோக்கம்

(6-ம் பக்கத் தொடர்ச்சி)

பக்கபலமல்லவா?—இப்படிப் பட்டவர்களை ஜெயிலில் போட்டால் காங்கிரசுக்கு வேலைசெய்ய பலம் வேண்டாமா? மகாலெக்ஷ்மி மில் முதலாளிகளை போனில் கூப்பிட்டு கிசு புசு என்று பேசிவிட்டு இவர்களை ஜெயிலில்போடு, அடி என்று சொல்லலாமா? 39-ம் வருஷம் ஒரு சோதனைக்காலம். ஒப்பற்ற முக்கிய வருஷம். சமஷ்டியை எதிர்க்க நம் சக்தியை இன்றைக்கே ஒன்றுசேர்க்க எத்தனம் செய்ய வேண்டும். எதிர்ப்பு என்பது மந்திரத்தில் மாங்காய்விழுகிற காரியமல்ல—காங்கிரஸ் தங்கள் ஸ்தாபனங்களை பலப்படுத்திக் கொள்வதுடன்—இதர சங்கங்களுடனும் ஒத்துழைத்து ஆதாவைப்பெற வேண்டும். பெரும் ஆலமரம்போன்ற ஏகாதிபத்தியத்தை எதிர்க்க—சமஷ்டியை எதிர்க்க பெரிய காற்று, சூறுவளி சண்டமாருதம் வேண்டும்.

### ஸ்ரீ தேவர்

பிறகு பெரும் கரகோஷத்திற்கிடையே ஸ்ரீ தேவர் எழுந்து "விவசாயிகளின் நிலையும் அரசியல் துறையும்" என்பதுபற்றிப் பேசும்பொழுது குறிப்பிட்டதாவது:—

சமஷ்டியை உடைப்பதற்கு வேண்டியவன் விவசாயி—பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தைநகற்றுபவன் விவசாயி-செக்ரட்டரி ஆப் ஸ்டேட் கனவு கண்டேன்-விஷநாகத்தின் பழு எனக்குத் தெரியவில்லை இதை நீக்குங்கள் என்று காந்தியிடம் மூக்கை நீட்டக்கூடிய விதம் செய்பவன் விவசாயி—ஏகாதிபத்யத்தின் விவரம் தெரியவேண்டியது விவசாயியின் கடமை—வலுவுடைய ஏகாதிபத்தியம்—சோதாவாகவும்— அறிவுடைய ஏகாதிபத்திய நாடு மடமை நாடாகவும் மாறிவிட்டதென்று சொல்லவேண்டியிருக்கிறது. இதன் காரணமாவது: இந்த பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்கு நான்கு பக்கமும் சமுத்திரம் எல்லையாக இருக்கின்றது—மற்றவைகளுக்கு தரை எல்லையிருக்கும்.

சோதா: ஆகாயக்கப்பல் வந்துவிட்டது. வானச்சண்டை வந்துவிட்டது. கம்பு, கத்தி, வாள், குதிரையேற்றம் மல்யுத்தம், கட்டாரிச் சண்டை, கவண்கல் எறிதல், வில்கம்பு, வளரி எறிதல் முதலியவற்றில் அதிவீராயிருந்த நம் நாடு துப்பாக்கியால் எப்படி சோதாவாக்கப்பட்டதோ அதே போல் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்கு ஜன்னிவந்து ஹிட்லர் முசோலினி இருவரையும் நெவிலீசேம்பர்லேனுக்குத் தலைக்கு வைத்துக் கட்டப்பட்டிருக்கின்றது. விவசாயம், குற்றம், குறை, பாபம் இல்லாத தொழில். உழைப்பு, தர்மம் யோக்கியதை நிறைந்தது. மழை நனைய வைக்கும் நிலத்தை விவசாயி தன் வியர்வையாலும் நனைய வைக்கின்றான். பஞ்சத்திலும் களத்திற்கு வந்த பிச்சைக்காரனுக்கு ஒரு கை நெல் போடாத விவசாயி கிடையாது. இப்பொழுது அதிக விளைவு இல்லாதது, மழையில்லாதது நாமும் நம் முன்னோர்களும் செய்த பாபம் என்று விவசாயி நினைக்கின்றான். இளநீர் சாப்பிடப் பிரியப்பட்டவன் மட்டையை உரித்துக்கொண்டிருக்கின்றான் (விவசாயியின் உழைப்பு) அதனுள்ளிருக்கும் சிரட்டை (சண்டாள கவர்ன்மெண்டு) உள்ளிருக்கும் இளநீரை மறைத்துக்கொள்கின்றது. மட்டையை உரித்தவனுக்கு ஒன்றும் பிரயோஜனமில்லாது போய்விடுகின்றது. இதை ஒவ்வொரு விவசாயியும் உணரவேண்டும். பட்டணத்திலுள்ள படித்தவர்கள் தங்கள் வாழ்நாளைப் புனிதப் படுத்த கிராமங்களுக்குச் சென்று விவசாயியைக் கை கொடுத்துத் தூக்கவேண்டும்; ஜமீந்தார்கள் வண்டிகளாகவும், வெள்ளைக்காரன் வண்டியோட்டியாகவு மிருந்து கொண்டிருக்கின்றனர். விவசாயிகளாகிய மாடுகள்-பட்டா முதலியவை உரசுமென்று இதுவரை இழுத்தேன்; இனி இழுக்கமுடியாதென்று விழுந்து படுத்துக் கொள்ள வேண்டும். யார் வந்தாலும் அங்கேயே இரு—இல்லையேல் எங்களை எல்லாம் ஜெயிலில் போடு என்று சொல்லும் எழுச்சி உங்களிடை வந்தால் ஏகாதிபத்தியம்—சமஷ்டி முதலியவற்றை எளிதில் தகர்க்க முடியும். நான் இப்பொழுதுதான் சமீபகாலத்தில் ஜெயிலுக்குப் போயிருந்தேன். முன்பு பார்த்ததற்கும் இப்பொழுது பார்ப்பதற்கும் என்னிடம் ஏதாவது வித்தியாசம் இருக்கின்றதா? என் காது மூக்கு எதையாவது ஜெயிலில் பிய்த்துக்கொண்டார்களா? அப்படி ஒன்றும் ஜெயிலுக்குள் நடக்கப்போவதில்லை. தெருவில் சாப்பாட்டிற்கும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் பிச்சைக்காரன்கூட ஜெயில் என்றால் தன் ராஜவாழ்க்கை போய்விட்டதென்று நினைக்கின்றான். பிச்சை எடுப்பவர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து பிச்சை கிடைப்பதுமிகக் கஷ்டமாக இருக்கின்றது. ஜெயிலுக்குத்தான் போகிறது என்று நினைத்து விட்டார்களேயானால் நாளையே இந்த ஏகாதிபத்தியத்திலிருந்து விடுபட்டு விடலாம். விவசாயி உலகத்தின் தாய் தகப்பனுகவும், அஸ்திவாரமாகவும் முது கெலும்பாகவுமிருக்கின்றாய்-ஏகாதிபத்யத்திற்கு உயிர்ப் பிச்சை கொடுக்கும் ஔடதம், பிராண நிலையாக இருக்கின்றாய்- மறியலால் கள்ளுக்கடைக்கார முதலாளி அவன் சொந்தக்காரர்கள் முதலியவர்கள் பகை காங்கிரசுக்கு ஏற்பட்டது. பிறகு சீமைத்துணி பகிஷ்காரத்தால் ஜவுளிக் கடை முதலாளிகள் பகையும், அவர்களைச் சேர்ந்தவர்கள் பகையும் ஏற்பட்டன. கோவிலுக்குள்ளே எல்லோரையும் விட்டாலென்ன என்றதால் சனாதனிகள் பகையும் ஏற்பட்டது. சனாதனம் என்றால் என்ன? ஒழுக்கம் நல்லது என்று கண்டும், துன் மார்க்கத்தை விலக்கியும் பணம் கெடுதல் என்பதும் சனாதனமாகும். குடிக்கும் ஐ.ஸி.எஸ். காரனுக்கும், பிரேதத்தை அறுக்கும் பொழுது தங்க மோதிரம் கையில் கிடந்தால் அதைக் கழற்றி இடுப்பு வாரில் போட்டுக்கொண்டு லோஷனில் கையைக்கழுவிக்கொள்ளுபவருக்கும் பெண்ணைக்கொடுத்துவிட்டு அவர் வீட்டில் சாப்பிட்டுக்கொண்டு திரிபவர் சனாதனிகளல்ல. காங்கிரஸ்என்ற ஒப்பெரிய ஆலமரத்தைத் தொழிலாளிகளும் விவசாயிகளுமாக இரண்டு குழந்தைகள் விழுதுபோன்று தாங்குவதற்காகச் சேரவேண்டும். வர்க்கப் போராட்டம், எலி-பூனை, மான்-புலி, யானை-சிங்கம், வைரி—மைனு மாதிரிதான். முயல் ஒன்று இருந்தால் மற்றொன்று பிழைக்க வழியில்லாததுபோல்மனிதருள்ளும்இருக்கின்றது. படித்தவர்-படியாதவர், விவசாயி ஜமீன்தார், தொழிலாளி-முதலாளி, தொத்தல்-வலியன்என்றுஇருக்கின்றார்கள். இவர்களுமப்படியே. மாகாணக் காங்கிரஸ் அங்கத்தினர் பதவிக்கு இருவர் நின்றதில் ஒருவர் வாபஸ் பெற்றுக்கொண்டமைக்காகப் பாராட்டுகிறேன்.

பிறகு ஸ்ரீ அண்ணாமலையால வந்தனோபசாரம் கூறப்பட்டு இரவு சுமார் 10மணிக்குக்கூட்டம் இனிது நிறைவெய்தியது.



## மதிப்புரை

### ஸ்ரீ கிருஷ்ண சின்ஹா

[ஆசிரியர்: ஸ்ரீ கே. ராமனுதன். பக்கம் 23. பிரசுரித்தோர்: சென்னை லோகசக்தி பிரசுராலயம். விலை: அணு 1. கிடைக்குமிடம்: லோகசக்தி ஆபீஸ் சௌத் கூவம்ரோட் சென்னை]

பீஹார் பிரதம மந்திரி ஸ்ரீ கிருஷ்ண சின்ஹாவின் வாழ்க்கைக் குறிப்பு. தாய்நாட்டுச் சேவையில் தலைநிற்கும் வீரர்களில் இவரும் ஒருவர். பீகாரில் நேர்ந்த மந்திரிசபை நெருக்கடி உலகப் பிரசித்தமானது. அரசியல் கைதிகள் விடுதலை விஷயத்தில் கவர்னருக்கும் மந்திரிசபைக்கும் தகராறு ஏற்பட்டது. தம் கொள்கையை அமுல்நடத்த இயலாதபோது, பதவி எற்றுக்கு என உதறித் தள்ளினர் இவ்வீரர். இத்தகைய வீரரின் சரித்திரத்தைத் தமிழ் மக்கள் அனைவரும் படித்தறியும் வண்ணம் லோகசக்தி பிரசுராலயத்தார், இதை வெளியிட்டிருப்பது போற்றத்தக்கது. ஸ்ரீ கிருஷ்ண சின்ஹாவின் உருவப்படம் மேலட்டையில் பொறிக்கப்பெற்றிருக்கிறது.

★

### ஸரோஜா

[ஆசிரியர்: ஸ்ரீ ராம. ராமநாதன், கோட்டையூர். பக்கம்: 36. வெளியிட்டோர்: தேவகோட்டை ஸ்ரீ வி. மெ. ராம. மீனாட்சிசுந்தரம். விலை: அணு 3.]

'தனவணிகன்' வாரப்பத்திரிகையில் வெளிவந்த ஒரு சிறுகதை புத்தக ரூபமாக இப்பொழுது வெளியிடப்பட்டிருக்கிறது. சமூக சீர்திருத்தக்கதை. படிப்போர்க்கு விதவைகளின் துயரையும், இளமை மணத்தால் சமூகத்துக்கு ஏற்படும் தீமைகளையும் நன்கு விளக்கும் முறையில் கதை அமைந்திருக்கின்றது. தமிழ்நாட்டின் முன்னேற்றத்திற்கு இத்தகைய சீர்திருத்தக்கதைகள் மிக மிகத் தேவையாகும்.

★

### ஜெக்கோஸ்லோவேகியா.

[எழுதியது: "ஜோதி" ஆசிரியர் ஸ்ரீ வெ. சாமிநாத சர்மா. பக்கம்: 250. பிரசுரித்தோர்: பிரபஞ்ச ஜோதி பிரசுராலயம் 47, 31-வது வீதி இரங்கோன். விலை ரூபா ஒன்று]

பொஹிமியா என்ற நாடுதான் ஐரோப்பிய யுத்தத்திற்குப் பின்னர் ஜெக்கோஸ் லோவேகியாவாக மாறியது. சமீபத்தில் ஸெக் பிரச்னை கிளம்பி உலகையே ஒரு குலுக்குக் குலுக்கிவிட்டதல்லவா? ஸெக் பிரச்னைக்குரிய மூலகாரணமென்ன? அதற்கும் ஜர்மனிக்கும் என்ன சம்பந்தம்? அதைத் தன் ஆதிக்கத்திற்குட்படுத்த ஏன் ஹிட்லர் விரும்பினர்—என்ற சூட்சமங்களையெல்லாம் அறிய விரும்புவோருக்கு இந்நூல் நன்கு பயன்படுவதாகும். ஆசிரியர் மிகுந்த சிரமத்துடன் பல விவரங்களையும் கோத்து இந்நூலை அமைத்திருக்கிறார். நாட்டின்சரித்திரம், குடியரசு ஆரம்பம், ஸுடேடன் ஜர்மானியர், சமாதானத்துக்குப் பலி முதலிய பதினைந்து அத்தியாயங்களில் இவ்வரலாறு விவரிக்கப்பட்டிருக்கிறது. இந்நாட்டின் அரசியல் வாழ்க்கையில் சம்பந்தப் பட்டவர்களின் வரலாறு அனுபந்தமாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது. ஆசிரியருக்கு இயல்பான எளிய இனிய தமிழ் நடை படிப்போர் மனத்தைக் கவருவதாயிருக்கிறது. வெறும் புள்ளி விவரங்களும், விஷய அட்டவணைகளும் நிறைந்த சரித்திரம் போலிராமல், படிப்பதற்கு ருசி யேற்படும்வண்ணம் விஷயங்கள் கோக்கப்பட்டிருக்கின்றன. ஸெக்கோஸ் ஸ்தாபனங்களைப்பற்றிய படங்களும், ஸெக்கோ சுதந்திரத்துக்காகப் பாடுபட்ட தாமஸ் மஸாரிக், எட்வர்ட் பெனேஷ் இவர்களின் படங்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. தமிழர்கள் அரசியல்

## ஸ்ரீ பழனியப்ப செட்டியார் பிறந்ததின விழா

(ஒரு நிருபர்)

நிகழும் மார்கழித் திங்கள் 14ம் நாள் (29-12-38) வியாழக்கிழமை முற்பகல் 10-30 மணிக்கு நேமத்தான்பட்டி திருநாவுக்கரசு வித்தியாசாலை அதிபர் ஸ்ரீமான் சி. வீ. நா. பழனியப்ப செட்டியாரவர்களின் 67-வது ஆண்டு பிறந்த தின விழா பள்ளத்தூர் ஏ. வி. ஹைஸ்கூல் தலைமை ஆசிரியர் ஸ்ரீமான் ஏ. எம். எஸ். இராகவன் அவர்கள், பி. ஏ., எல். டி., தலைமையில் சிறப்பாக வித்தியாசாலையில் கொண்டாடப்பெற்றது. ஆசிரியர்களும் மாணவ மாணவிகளும் அன்பர்களும் மேளதாளத்துடன், அதிபரவர்கள் இல்லத்திலிருந்து



ஸ்ரீ பழனியப்ப செட்டியார்

தலைவரவர்களுக்கும், அதிபரவர்களுக்கும் அவர்களின் பத்தினியாருக்கும் மாலை அணிவித்து ஊர்வலமாக வித்தியாசாலைக்கு அழைத்து வந்தனர். கடவுள் வணக்கத்துக்குப் பின் ஆசிரியர் திரு. எஸ். ஆண்டியப்பா அவர்கள் தலைவரவர்களுக்கும், தலைமை ஆசிரியர் திரு. எஸ். தங்கவேல் அவர்கள் அதிபரவர்களுக்கும் வந்தனோபசாரங்கள் படித்துக் கொடுத்தனர். ஆசிரியர் திரு. எஸ். ஆர். கணபதி செட்டியாரவர்கள் அதிபர் அவர்களுக்கு வாழ்த்துக் கவி ஒன்று எழுதி பண்ணுடன் பாடிக் கொடுத்தார்கள் வித்தியா சாலையில் புதிதாக ஏற்படுத்தப்பட்டிருக்கும் டெலிபோன் மூலம் பள்ளத்தூரிலிருந்து அதிபர் அவர்களுக்கு வாழ்த்துச் செய்தி ஒன்று வந்தது. பிறந்ததின ஞாபகார்த்தமாக தலைமை ஆசிரியர் திரு. எஸ். தங்கவேல் அவர்களால் வரையப்பெற்ற வித்தியாசாலை கட்டிடப் படத்தை தலைவர் நீண்ட கரகோஷத்தினிடையே திறந்து வைத்து அவர்களின் கைத்திறமையையும் வியந்து கூறினர்கள். பின் பக்கமேளத்துடன் தலைமை ஆசிரியரின் ஜலதரங்கக்கச்சேரியும் மாணவமாணவிகளின் பாட்டு, நடிப்பு, கும்மி, கோலாட்டங்களும், ஹிந்துஸ்தான் வாலிபச் சாரண "அரிச்சந்திரா படை" சாரணர்களின் துப்பறியும் கதை நடிப்பும் நடைபெற்றன. தலைவரவர்கள் முடிவுரையாக அதிபரவர்களின் பெருங்குணம், கொடைத்திறன், வித்தியாசாலையில் காட்டிவரும் அக்கரை, ஆசிரியர்களுக்கும், மாணவ-மாணவிகளுக்கும் செய்ய வேண்டிய சௌகரியம், பெற்றோர்களின் ஒத்துழைப்பு, ஆசிரியர்களின் ஊக்கம், திறமை இவைகளைக் குறித்து விளக்கமாகப் பேசினார்கள். பின் தேவார ஆசிரியர் திரு. சே. இ. பெருமாள் அவர்கள் இனிமையான சில தேவாரங்கள் பாடினார்கள்.

ஆசிரியர் திரு. ஆண்டியப்பா அவர்களால் எல்லோருக்கும் நன்றி கூறி மாலை அணிவிக்கப்பெற்று நாட்டு வாழ்த்துடன் சிற்றுண்டி வழங்க கூட்டம் 1-மணிக்கு இனிது நிறைவெய்தியது. கூட்டத்திற்குப் பெண்கள் ஏராளமாக வந்திருந்தது குறிப்பிடத் தக்கது.

---

### மலிவான ரேடியோ செய்ய

மலிவான ரேடியோ ஸெட்டுகள் செய்வதுபற்றி ஆராய்ச்சிகள் நடத்துவதற்கு சென்னையில் ஒரு லாபரேட்டரி ஏற்படுத்தப்படுமென்றும் இதற்காக சர்க்கார் சுமார் 50,000 செலவிட உத்தேசிப்பதாயும் தெரிகிறது.

ஞானம் பெறுவதற்கு இம்மாதிரி பிரசாங்கள் மிக மிகத் தேவை யென்பதில் ஐயமில்லை. நல்ல காகிதத்தில் நேர்த்தியாக அச்சிடப்பட்டிருக்கிறது.

Bleed through.

# சோஷலிசம் அல்லது சம உடைமை

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

தொழிலை நடத்துவதற்குக்கூட முதலாளிமார்கள் தயங்கமாட்டார்கள். தென்னை மரத்திலிருந்து இளநீர் தேங்காய் முதலியனவும் கள்ளும் கிடைப்பது உங்கள் எல்லோருக்கும் தெரிந்த விஷயம். தென்னைமரத்திலுள்ள எப்பாகமும் பழுதாய் போவதில்லை. யாவும் பயனுள்ளவை. இதனால் நமது முன்னோர்கள் தென்னையைக் கற்பக தரு என்று சொல்லிவந்தனர். ஆனால் தென்னை இப்பொழுது கற்பக தருவாயில்லாமல், கள் என்னும் நஞ்சைக் கொடுக்கும் மரமாக மாறிவிட்டது. இளநீர், தேங்காய் விற்றுவரும், வரும்படியைக் காட்டிலும், கள் இறக்கி விற்பதனால் அதிக லாபம் கிடைத்தபடியால், முதலாளிகள் தங்களுடைய தென்னைமரங்களைக் கள் குத்தகைக்கு விட்டுவிட்டார்கள். கள் வியாபாரம் காடெங்கும் பரவலாயிற்று. நாட்டை ஆளும் அந்நிய அரசாங்கத்திற்கு மட்டும், சென்னை மாகாணத்தில் வருஷமொன்றுக்கு 4 கோடி ரூபாய் வருமானம் கிடைத்துக் கொண்டிருக்கிறது. இத்தீமை அந்நிய ஆட்சியால் ஏற்பட்டதென்று சொல்லி சிலர் வாதாடலாம். இது முற்றும் தவறு. நம் நாட்டிலுள்ள தென்னைமரங்கள் யாவும் வெள்ளையருக்குச் சொந்தமானவையல்ல. பெரும்பாலும் இந்திய முதலாளிமார்களின்கைகளில்தானிருக்கின்றன. லாபத்தைப் பெரிதாகக் கருதாமல் நாட்டு மக்களின் உடல் நலத்தை லட்சியமாகக்கருதியிருப்பார்களேயானால், நம்மிந்திய முதலாளிகள் தென்னை மரங்களையெல்லாம் கள் குத்தகைக்கு விட்டிருக்க மாட்டார்கள். நாட்டு மக்களின் உடல் நலமும் கெட்டுப் போயிருக்காது. காங்கிரஸ் காரரும் பிறரும் கள்ளை நாட்டை விட்டு துரத்துவதற்குப் பாடுபட்டுக் கொண்டிருக்க வேண்டிய அவசியமும் நேர்ந்திருக்காது.

பொருள் உற்பத்தி செய்யும் முறையையும் நிலத்தையும் தனியுடைமை முறையில் விட்டுவிடுவதனாலே இம்மாதிரி நாட்டின் நலமும் முற்போக்கும் தடைப்பட்டுப் போகின்றனவென்றும், ஆகையால் நிலத்தையும் பொருள் உற்பத்திசெய்வதையும் தேசியமயமாக்கி அரசாங்கத்தாரே நிர்வகித்து நடத்தவேண்டுமென்றும் சம உடைமை வாதிகள் சொல்லுகிறார்கள். இதனால் நாட்டு மக்களுக்கு இன்றியமையாத வேண்டும் பொருள்கள் தடையில்லாமல் எளிதாய் சகாயமான விலைக்குக் கிடைப்பதுடன் நாட்டின் நலத்திற்குத் தீமை பயக்கும் காரியங்களையும் தடுத்துவிடலாமென்று கூறுகிறார்கள்.

இத்திட்டத்திற்கு விரோதமாய் முதலாளிகள் கிளர்ச்சி செய்கிறார்கள். ஒரு நாட்டினுடைய சகல தொழில் வளர்ச்சிக்கும் முதல் அவசியமென்றும், முதல் சேகரித்து வைப்பது தனியுடைமை ஒன்றினால் மட்டுமே முடியுமென்றும் ஆகையால் நிலத்திலும் முதலிலும் தனியுடைமை (capitalism) முறை இருக்கவேண்டியது அவசியமென்றும் சொல்லுகிறார்கள். மேலும் மனித சுபாவம் இயற்கையமைப்பிலே தன்னலத்தை அடிப்படையாகக் கொண்டதென்றும், தனக்காகப் பிரத்தியேக வருவாய் இல்லாவிட்டால் மக்கள் ஒரு காரியத்தையும் விருப்போடு செய்ய மாட்டார்கள் என்றும் கூறுகிறார்கள். விருப்பின்றி செய்யப்படும் காரியங்கள் நல்ல பயனைத்தருவதில்லை என்றும், பயனற்ற காரியங்களால் நாட்டின் சீரும் சிறப்பும் மங்கிப்போய்விடுமென்றும், அதனால் நாகரீகம் கலை வளர்ச்சி தடைப்பட்டுவிடு மென்றும், கலையில்லாத வாழ்க்கை காட்டுமிராண்டி வாழ்க்கையென்றும், பிரசாரம் செய்கிறார்கள். இதனால் தனியுடைமையே நலம் பயப்பதென்றும் சம உடைமை வரவேண்டு மென்பது காட்டுமிராண்டித்தனத்தை விரும்பி வரவேற்பது போலாகு மென்றும் சொல்லி வாதாடுகிறார்கள்.

—

### பரோடா மன்னர் நன்கொடை

பரோடாவில் நிலவரிக் குறைவால், பொக்கிஷத்தில் ஏற்பட்ட நஷ்டத்தை ஈடுசெய்ய, செய்க்வார், தமது சொந்த நிதியிலிருந்து ஒரு கோடி ரூபாய் உதவியிருக்கின்றார். முன்னர், வெள்ளி ஜுபிலி நிதிக்கு ஒரு கோடி நன்கொடையளித்தார்.

# * விஞ்ஞானம் *

### நீண்ட ஆயுள்

நீண்ட காலம் ஒருவர் வாழ்ந்திருக்க வேண்டுமானால், சாதாரணமாகக் கொள்ளப்படும் உடம்பின் எடை அளவை விட்டுவிட வேண்டுமென்று ஐரோப்பிய நிபுணர் ஒருவர் கூறுகிறார். இளமையில் இந்த அளவைவிடக் கூடுதலாகவும், நடுத்தர வயதுக்குப் பிறகு இந்த அளவைவிடக் குறைவாகவும் எடையிருப்போர் நீண்டகாலம் வாழ முடியுமாம். தினம் மூன்று வேளை உணவுக்குப் பதில், சிறிது சிறிதாக ஆறு வேளை உண்ணலாமென அவர் யோசனை கூறுகிறார். 370,000. இன்ஷுரன்ஸ் பாலிஸிதார்களைப் பரிசோதித்ததிலிருந்து, நீண்டகாலம் உயிர் வாழ்வதற்குரிய எடை எவ்வளவு என்று ஒப்புக்கொள்ளப் பட்டிருப்பது, வாலிபர்களுக்கு மிகக் குறைவாகவும், வயோதிகர்களுக்கு மிகக் கூடுதலாகவும் இருக்கக் காண்பதாக டாக்டர் ரபினோவிட்ச் கூறியுள்ளார். நியாயமான அல்லது அதற்குக் குறைந்த அளவு எடையுள்ள 60 வயதினரான லட்சம் பேர்களில், ஐம்பதாயிரம் பேர்கட்கு மேல் எழுபது வயது வரை வாழ்ந்தனர்; ஆனால் அதே சமயத்தில், நியாயமான எடைக்கு அதிக அளவு எடையுள்ளவரில் லட்சத்துக்கு 38000 பேரே எழுபது வயது வரை வாழ்ந்தனராம்.

○

### மூவா மருந்து

ஆயுளை நீடிக்கச் செய்ய என்ன வழி என்பதை உலகிலுள்ள விஞ்ஞானிகள் பலரும் கண்டுபிடிப்பதில் முனைந்து வருகின்றனர். ஜெக்கோஸ்லோவேகியாவைச் சேர்ந்த இரு டாக்டர்கள், கூடிய விரைவில் இதில் வெற்றியை எதிர்நோக்கி நிற்கின்றனர். ஒருவித இஞ்சக்ஷன் மூலம் முதுமையை வென்று விடலா மென்று அவர்கள் நம்புகின்றனர்.

○

### விண் மீன்களின் ஜாப்தா

வானிலுள்ள நட்சத்திரங்களின் ஜாப்தா ஒன்று தயாரிக்கப்பட்டு முடிந்து விட்டது. இந்த வேலை முடிய முப்பத்தைந்து வருஷங்கள் பிடித்தன. 1300 பக்கங்கள் கொண்ட இந்த ஜாப்தா சமீபத்தில் தான் வெளியானது. 33,000 நட்சத்திரங்களின் இருப்பிடம், ஜாதி, சலன முறை யெல்லாம் இதில் விளக்கப்பட்டிருக்கின்றன. வானிலுள்ள கோடிக் கணக்கான நட்சத்திரங்களில் இது ஒரு சிறு பகுதியேயாயினும் வான சாஸ்திரிகட்கு இது மிகவும் பயன் படத்தக்க ஒன்றாகும்.

○

### வெந்தழலால் வேகாது

அமெரிக்க கவர்ன்மெண்டின் விவசாய இலாகா, தீயில் வேகாத துணி செய்யும் விதத்தைக் கண்டுபிடித்திருக்கிறது. ஒரு மருந்துக் கூட்டில் துணியைத் தோய்த்துவிட்டால் போதும். மருந்தும் எளிதாகக் கிடைக்கக் கூடிய மருந்துதான்.

○

### நெருப்பை அவிக்க நூதன யந்திரம்.

தண்ணீரில்லாத இடங்களில், மண், கல், மணல் கொண்டு நெருப்பை அவிக்கும் நூதன இயந்திரமொன்றை ஒரு அமெரிக்கர் செய்திருக்கின்றார். சிறு யந்திரந்தான். தோள்மீது போட்டுக் கொண்டுபோகலாம். அது மண்ணையோ, மணலையோ அல்லது சாளையையோ தோண்டி நெருப்பின்மீது வீசும்.

○

### கண்ணாடி இருதயம்

கர்னல் சார்ல்ஸ் லின்ட்பர்கின் கண்ணாடி இருதயம் 900 பரிசோதனைகளில் லட்சம் மணி நேரத்திற்குமேல் உபயோகிக்கப்பட்டு, பயனுடையதென முடிவு செய்யப்பட்டிருக்கிறது. மனிதர்களுடையவும், தாழ்ந்த மிருகங்களினுடையவும் பல அவயவங்களையும் உயிர்ப்பிக்க இது உபயோகிக்கப்பட்டது.

---

**ஜோதிட மகுட வர்த்தனர்**
**9-5-38ல் சென்னை ஜோதிஷர் மகாநாட்டின் சபைத்தலைவர்**



இந்து மன்னர் சமஸ்தான 25-வது தலைமுறை ஜோதிஷர் பீமகவி, சுகர், புஜண்டர், சாஸ்திரநிபுணர். ஜோதிஷத்தில் "உலக சிரேஷ்டர்" ஜாதகம் கணிக்க ரூ.2 ஒரு தெசைக்கு புத்தி பலன் ரூ3. பருவம்-மண்டலம்-சமையம் அஷ்ட வர்க்கம் ஆயுள்வரை புத்திபலன் ரூ. 10 (ஜாதகம் முன் பணம் தேவை) 1 வருடம் மாதா மாதப்பலன் ரூ. 2 கேள்வி 6-க்கு ரூ. 1. ஜாதகம் அல்லது எழுதும் நேரம் தேவை.

புரோபஸர். N. V. சுப்பிரமணியம்,
கிர். 6-A. ஜோதிஷ ஆஸ்ரமம்
வாலாஜாபாத் P. O. S. I. R.

---



பார்ப்பவர்கள் வெறுப்பதா?
எத்தனைகாலம் இந்தக் கொடுமையை பொறுத்-திருப்பது
கொடிய ரோகங்களிலே வருந்த வேண்டாம்
திமிர் குஷ்டம் மதமதப்பு முதலிய வியாதி-களுக்கு
சி.எம் சாமி
குரு தாம்பா பஸ்பம்
உபயோகியுங்கள்
50 வேளை ரூ-12-8-0
மலையப்பசாமி வைத்தியசாலை
பழனி, தென் இந்தியா.

---

# இந்தியன் பாங்கி லிமிடெட்.

ஹெட் ஆபீஸ்:— நார்த் பீச்ரோடு, சென்னை.

பிராஞ்சு:—காரைக்குடி, புதுக்கோட்டை.

வட்டி விகிதங்கள்:—

| | | | |
|---|---|---|---|
| தவணைக் கணக்கு | 1 வருஷம் | 2½% | |
| ” | 2 வருஷம் | 2½% | |
| சேவிங்ஸ் பாங்கு கணக்கு | | 2½% | ரூ 5000 வரை |
| நடப்புக்கணக்கு | | 1 % | வட்டி உண்டு. |

காஷ் சர்டிபிசேட்டுகள்:—

ரூபாய் 50-க்கும் அதற்கு மேற்பட்ட ஒவ்வொரு 50 ரூபாய்க்கும், 3 வருஷ காஷ் சர்டிபிகேட்டுகள் கொடுக்கப்படும். ரூ. 46-2-0 கொடுத்தால் 3 வருஷக் கடைசியில் ரூ. 50/- கிடைக்கும். இந்த திட்டத்தில் 2¾% காம்பவுண்டு இண்டரஸ்டு கிடைத்திருக்கிறது என்பது கவனிக்கத் தக்கது.

காரைக்குடி ஏஜண்ட்:— எம். ராமமூர்த்தி,



# கோர்ட்டுகளின் நிர்வாக அறிக்கை

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

விதிக்கப்பட்ட தண்டனை விவரமும், தண்டிக்கப்பட்டோர் தொகையும் வருமாறு:—

| | |
|---|---|
| மரண தண்டனை | 143 |
| தீவாந்திரம் | 238 |
| கடுங்காவல் | 22,294 |
| வெறுங்காவல் | 2,393 |

அபராதமாக விதிக்கப்பட்ட தொகை ரூ. 14,49,918. இதில் ரூ 31,228 மனுதார்களுக்கு நஷ்ட ஈடாக வழங்கப்பட்டது. வெளி ஜில்லாக்களில், செஷன்ஸ் கோர்ட்டு விசாரணைக்கு ஆஜரான சாட்சிகளுக்குக் கொடுக்கப்பட்ட பிரயாண, படிச்செலவு தொகை ரூ 56,758. ஜூரர்களுக்கும் அஸஸர்களுக்கும், மேற்படி இனத்தில் ரூ 19,892 கொடுக்கப்பட்டிருக்கிறது.

கொலைக் குற்றம் சாட்டப்பட்ட ஏழைக் குற்றவாளிகளின் சார்பில் வாதஞ் செய்ய நியமிக்கப்பட்ட பிளீடர்களுக்குக் கொடுக்கப்பட்ட சம்பளம் ரூ. 25,469.

—

### வகுப்பு வேற்றுமை ஒழிய கலப்பு விவாகமே மருந்து

பற்பல வகுப்பினரின் நாகரிகமும், கலைஞானமும் பெருகுவதற்காகப் பற்பல மாகாணங்களிலுள்ளவர்களும் கலப்பு விவாகத்தை அனுஷ்டிக்க வேண்டுமென கௌஹாத்தியில் நடைபெற்ற பிரபாசி வங்க சாஹித்திய சம்மேளனத்தில், தலைமைவகித்த ஐக்கிய மாகாணக் கல்வி இலாகா டைரக்டர் டாக்டர் நீலரத்னதார் பலமாக வற்புறுத்திப் பேசினார். வகுப்பு வேற்றுமைகள் ஒழியவும், இந்தியர்கள் ஒரே சாதியினராகவும் இதுவே சிறந்த வழியென்று அவர் கூறினார்.

—

### கல் ஒட்டர்களைச் சீர்திருத்த

தேவகோட்டை விடுதலைக் கைதிகள் சங்கத் தலைவரும் சப் கலக்டருமான ஸ்ரீ யம். யஸ். சிவராமன் ஐ. ஸி. எஸ். கல் ஒட்டர் வகுப்பைச் சேர்ந்த சில குடும்பங்களை மேற்படி சங்கத்தின் பரிபாலனத்தில் எடுத்து அவர்களுக்கு நிலமும், வேலையும் கொடுக்க ஏற்பாடு செய்துவருகிறார். தெரிந்தெடுக்கப்படும் குடும்பங்கள் இம்மாதம் முதல் தேவகோட்டையில் வாசஞ்செய்வார்கள்.

—

### பெண்களுக்கு கவர்னர் பதவி!

பிரிட்டிஷ் காலனி, குடியேற்ற நாடுகளில் நிர்வாக பதவிகளுக்கு இனி பிரிட்டிஷ் பெண்களும் நியமிக்கப்படலாமென்று தெரிகிறது. இதுவரைப் பெண்களுக்கு இவ்விரு இலாகாக்களிலும் இருந்த தடையை நீக்கிவிட்டதாகப் பார்லிமெண்டில் ஸ்ரீ மால்கம் மாக்டொனால்டு தெரிவித்தார்.

—

### 'ஜெர்மானியா' நின்றது

69 வருஷங்களாய் பெர்லினில் நடந்துவந்த "ஜெர்மானியா" என்ற கத்தோலிக்கப் பத்திரிகை சென்ற மாதத்தோடு நின்று விட்டது. அது கெய்சர் காலத்திலும், ஹிட்லருக்கு முன்பும் முக்கியமான பத்திரிகையாயிருந்து வந்தது.

—

### வார்தாவில் மதுவிலக்கு

ஜனவரி முதல்தேதி, வார்தாவில் மதுவிலக்குப் பிரசாரத்தை, மத்திய மாகாண மந்திரி கனம் பருக்கா ஆரம்பித்துவைத்தார். மது அரக்கனைப் போன்று செய்யப்பட்ட உருவம் ஊர்வலமாக எடுத்துச்செல்லப்பட்டு தீயிட்டுக் கொளுத்தப்பட்டது.

# கிராமக் கைத் தொழிலும் சர்க்காவும்

### மகாத்மாவின் வாழ்க்கை லட்சியம்

"இப்பொழுது தினசரி அரை அணா கூட வருமானம் கிடைக்காத கிராமவாசிக்கு 8 அணா கிடைக்கும்படிச் செய்வதே என் வாழ்க்கையின் லக்ஷியம்" என்று மகாத்மா காந்தி, காலஞ்சென்ற மகன்லால் காந்தியின் ஞாபகச் சின்னமாகக் கட்டப்பட்டிருக்கும் மகன் சங்காலயா, உத்யோகபவன் என்ற கிராம கைத்தொழில் மியூஸியத்தை டிசம்பர் 30உ திறந்துவைக்கையில் குறிப்பிட்டார்.

காந்திஜி மேலும் பேசியதாவது:—

"இந்த மியூஸியம், ஜனங்களின் அறியாமையை ஒழித்து கிராமகைத்தொழில் சாமான்கள் உயர்ந்த ரகமாக இருக்க உற்பத்தி செய்வோருக்கு உதவி புரியுமென நம்புகிறேன். கிராம கைத்தொழிலும் சர்க்காவும்தான் இந்தியாவுக்கு கதி மோட்சம். இப்பொழுது தினசரி அரையணாகூட வருமானம் கிடைக்காதவர்களுக்கு 2 அணா கிடைக்கும்படி செய்து வேலையில்லாத் திண்டாட்டப் பிரச்னையைத் தீர்க்க அவை (கிராம கைத்தொழில்கள், சர்க்கா) உதவிபுரியும். கோடிக்கணக்கான ஜனங்கள் இதில் கலந்து கொண்டால் மில்களோடுகூட அவைகளால் போட்டி போட முடியும். சர்க்காவும் கதரும் நாட்டிற்கு சுயராஜ்யத்தைக் கொண்டுவரும்.

"அகில இந்திய நூற்போர் சங்கம் இதுவரை ரூ 4 கோடியை விநியோகித்திருக்கிறது. இதன் மூலம் ஆயிரக்கணக்கான ஜனங்களுக்கு வேலைகொடுத்து அன்ன மளித்திருக்கிறது. இப்படியிருந்தும் அந்த ஸ்தாபனம் முதலாளிகளின் ஆதிக்கத்தி லில்லை. டவுன்களிலுள்ள படித்தவர்கள் ஒத்துழைத்தால் வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழித்து இந்தியாவின் 7 லக்ஷ கிராமங்களிலுமுள்ள ஹிந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் வேலை கொடுக்க முடியுமென நம்புகிறேன். இயக்கத்திற்கு கைதேர்ந்த எஞ்சினீயர்களோ கைதேர்ந்தவேலைக்காரர்களோ அவசியமில்லை. 2 மணி நேரத்தில் எந்த குழந்தைக்கும் நூற்றுக் கற்றுக் கொடுத்து விடுவேன்".

மத்ய இந்தியாவிலுள்ள சிதாமா சமஸ்தானத்தின் ராஜா சாகிப், பிரஜைகளுக்குப் பொறுப்பாட்சியளிப்பதாக அறிவித்திருக்கிறார்.

—

### கணவன் கொடுமை செய்ததாக மனைவியின் வழக்கு

விமல குமார போஸ் என்பவர் 1934-ல் சிகாகோவில், மார்கரெட் என்ற அமெரிக்க பெண்ணை விவாகஞ் செய்துகொண்டார். அடுத்த வருஷம் இருவரும் கல்கத்தாவுக்கு வந்தார்கள். இவர்களுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. சென்ற ஏப்ரல் மாதத்தில் விமல குமார போஸ் தன் மனைவியை கொடுமைப்படுத்த ஆரம்பித்தாராம். மார்கரெட் கல்கத்தாவில் ஒரு கம்பெனியில் வேலையிலிருந்தாள். கணவனுக்கும் அவள்தான் சாப்பாடு போட்டாள். கொடுமை பொறுக்காமல் இவள் கிறிஸ்துவ ஸ்திரீகள் சங்கத்திற்குப் போய் விட்டாள். கணவன் அங்கும் வந்து தொந்திரவு செய்தான். அவளுடைய விவாக மோதிரத்தையும் பிடுங்கிக் கொண்டானாம். மோதிரத்தைப் பிடுங்கும் போது அவளுக்குக் காயமேற்பட்டது. இதற்காக மார்கரெட் கணவன்மீது வழக்குத் தொடுத்திருக்கிறாள். வழக்கு ஜனவரி 18உக்கு ஒத்திவைக்கப் பட்டிருக்கிறது.

---





உலகத்தில் சிறந்த சரும ரோக நிவாரணி

எல்லா சரும வியாதிகளுக்கும் ஜாம்பெக் உபயோகியுங்கள்

சரும வியாதிகளுக்கும் காயங்களுக்கும் ஜாம்பெக் உலகத்திலேயே வெற்றிகரமான மருந்து. வெட்டுப்புண், காயங்கள், சிறாய்ப்பு இவற்றின்பேரில் சிறிது ஜாம்பெக்கைத் தடவினாலேயே புண்கள் ஆறிவிடும். ஜாம்பெக்கிலுள்ள அரிய மூலிகைத் தைலசத்து சருமத்தினுள் சென்று வலியைத் தணித்து வீக்கத்தை யகற்றி, சழும்பு சிறிதுமின்றிபுண்ணை ஆற்றுகிறது.

எல்லா மருந்து வியாபாரிகளும் ஜாம்பெக்கை ரூ 1க்கும் ரூ. 2-4-0 க்கும் விற்கின்றனர்.

ஏஜண்டுகள்:—

மெஸர்ஸ் தாதா அண் கோ, பி. டி. சேன்னை.

எப்போதும் ஜாம்பெக் உபயோகியுங்கள்

ZAM-BUK

மிருகக் கொழுப்பு கலவாதது

---

தெளிவான மாசு மறுவற்ற முகத்தோற்றத்திற்கு



மார்கோ சோப்பை உபயோகித்து உங்கள் முகத்தில் குற்றம் குறைவு இல்லாமல் பாதுகாருங்கள். அதன் நோய் நிவாரண கிருமி நாச நுரையானது, சருமத்தை சுத்தம் செய்வதுடன், சருமத் துவாரத்தினுள் அடைந்திருக்கும் நுண்ணிய அழுக்கையும் பிசுக்கையும் வெளியேற்றி, சருமத்தை மிருதுவாயும் மொறு மொறுப்புள்ளதாகவும் செய்கிறது.

மார்கோ சோப் ஒன்றே வேப்ப எண்ணை சேர்த்து செய்யப்படும் சோப். சரும சாஸ்திரிகள் வேப்ப எண்ணை சத்தையே சருமத்திற்கு உயர்ந்த டானிக் என்கிறார்கள். மார்கோவை உபயோகித்து உங்கள் முகத்தோற்றத்தை பரிபாலியுங்கள்.

மார்கோ சோப்

வாசனையும் மருந்துசத்து முள்ளது

கல்கத்தா கெமிக்கல்ஸ்.




HEYCOCK Co.

# சினிமாச் செய்திகள்

### மாத்ரு பூமி

தயாரிப்போர் பிரேமா பிலிம்ஸ். வேல் பிக்சர்வில் ஷூட்டிங் நடக்கிறது. அழகிய கிரேக்க இளவரசி ஹெலன், களவாடப்பட்டு ராஜபுத்திரத் தலைவன் உக்ரசேனன் முன்னிலையில் கொண்டுவரப் படுகிறாள். இதிலிருந்து கதை ஆரம்பமாகிறது. கிரேக்கர்கள் இந்தியாவில் படையெடுத்து வந்தபோது நிகழ்ந்த சரித்திரக்கதை. டி. யஸ். சந்தானம் உக்ரசேனனாகவும், எ. கே. ராஜலட்சுமி ஹெலனாகவும் நடிக்கின்றனர்.

★

### பேபி ருக்மணி

லாகரோடு செய்துகொண்ட கண்டிராக்டு முடிந்தவுடன், 'ராஜயோகி'யில் நடிக்க ஒப்பந்தம் செய்யப்பட்டிருக்கிறது. இப்படம் இம்பீரியல் ஸ்டுடியோவில் தயாராகிறது. டி. பி. ராஜலட்சுமியின் பாத்திரத்துக்குச் சமமான பாத்திரம் ருக்மணிக்கும் அளிக்கப்படும்.

★

### தீபன் பிலிம்ஸ்

செட்டிமார் நாட்டில் புதிதாக ஏற்பட்டுள்ள கம்பெனி. இவர்களுடைய முதல் படம் 'சித்ரா'. நியுடோன் ஸ்டுடியோவில் ஆரம்பமாகும். கதாசிரியர் திருச்சி எ. நடராஜனே டயரக்ஷனும் செய்வார். யஸ். ஜே. சுப்புலட்சுமியும், சுந்தர ராஜனும் பிரதம நடிகர்கள்.

★

### சகுந்தலா

வாடியா மூவிடோனில் பிடிக்கப்போகிறார்கள். யம். யஸ். சுப்புலட்சுமி பிரதம நடிகர். எல்லிஸ் ஆர். டங்கன் டயரக்ட் செய்வார். 'மதுரைவீர'னை பம்பாய் தணிக்கைபோர்டார் தணிக்கைசெய்து அனுமதித்து விட்டார்கள்.

★

### கீசக வதம்

சுந்தரம் ஸ்டுடியோவின் தமிழ்படம். ஹரிபாய் தேசாய் டயரக்ட் செய்வார். ரத்னுபாய் சகோதரிகள் முக்கிய நடிகர்கள். மயூராவின் 'அதிர்ஷ்டம்' எடிட்டிங் ரூமில் இருக்கிறது.

★

### கிராத—அர்ச்சுன

விசாகப்பட்டினம் வினஸ் பிக்சர்வின் தமிழ்படம். வால்தேர் ஆந்திர வினிடோன் ஸ்டுடியோவில், டயரக்டர் ஜி. ராமசேஷன் பெரும்பகுதியைப் பிடித்து விட்டார். யம். ஆர். கிருஷ்ணமூர்த்தி அர்ஜுனனாகவும், மிஸ். கே. சுப்பலட்சுமி ஊர்வசியாகவும் நடிக்கின்றனர். மிஸ் சுப்பலட்சுமியின் நடனம், பாட்டு, நடிப்பு, எல்லாம் பார்ப்போருக்கு நல்ல விருந்தாக இருக்குமாம்.

★

### வங்காள பிலிம் மகாநாடு

அகில வங்காள சலனப்பட மகாநாடு பரீத்பூரில் ஜனவரி 29, 30ல் நடைபெறும். ஸ்ரீ அனுகிநாத்போஸ் தலைமை வகிப்பார். நியு தியேட்டர்ஸைச்சேர்ந்த ஸ்ரீ பி. யன். சர்க்கார் திறப்புவிழா ஆற்றுவார்.

### இரட்டைப்படக் காட்சி

ஹாலிவுட்டுக்கு இப்பொழுது சோதனை காலம். அமெரிக்கப் படங்களுக்கு வெளி நாட்டில் பற்பல தடைகளும் கட்டுப்பாடுகளும் விதிக்கப்படுகின்றன. ஸினிமா தியேட்டர்கள், தங்கள் வருமானக் குறைவு பட்டதைச் சமாளிக்க, தொடர்ந்து ஒரே சமயத்தில் இரண்டு நீளப்படங்களைக் காண்பிக்கஆரம்பித்திருக்கின்றன. எனினும்வருமானங்கூடவில்லையாம். இதனிடையில், இந்தஇரட்டைப்படக் காட்சியால் பார்ப்போருக்கு சிரமம் அதிகமேற்படுவதாகப் புகார் செய்யப்படுகிறது. பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளின் ஆரோக்கியம் இதனால் பாதிக்கப்படுவதாகக் குறை கூறுகிறார்கள். சட்டத்தின்மூலம் இதைத் தடுக்கவேண்டுமென்று பேசிக்கொள்ளப்படுகிறது.

★

### ஜர்மனியைப் பகிஷ்கரிக்க

ஜர்மனியுடன் கொண்டுள்ள பொருளாதாரத் தொடர்புகளை வெட்டிக்கொள்ளும்படி கோரி, முக்கியமான சினிமா நட்சத்திரங்கள் சேர்ந்து ஒரு மனு தயாரித்து வருகின்றனர். இந்த மனுவில் தியேட்டர் செல்வோரிடம் கையொப்பம் வாங்கி பிரஸிடெண்டு ரூஸ்வெல்டுக்கு அனுப்பப் போகிறார்கள். சுமார் மூன்று கோடிக் கையொப்பங்கள் வாங்கப்போகிறார்கள்.

★

### ஜனநாயகத்தைப் பாதுகாக்க

அமெரிக்காவில் ஜனநாயகத்தைப்பாதுகாக்க, லாபம் விரும்பாத, ஒரு பிலிம் ஸ்தாபனம் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. இதற்கு ஆதரவளித்துள்ள இரு நூறு பிரமுகர்களில், அரசியல் வாதிகள், நாடக் கதாசிரியர்கள், கலாவிற்பன்னர்கள், நடிகர்கள், டயரக்டர்கள் எல்லோரும் கலந்துள்ளனர். இது வகைக்கு ஐம்பதாயிரம் பவுன் மூலதனம் சேர்க்கப்படுகிறது. முதல் வருஷத்தில் மூன்று படங்கள் தயாரிப்பார்களாம். தொழிலாளர் சங்கங்கள் முதலிய பொது நல ஊழிய ஸ்தாபனங்கள் மூலம் இவை விநியோகிக்கப்படும். சகல ரசங்களும் பொருந்திய கதைகளில் படம் தயாரிக்கப்படும்; ஆனால் அடிப்படையான நோக்கம், ஜனநாயகத்தைப் பாதுகாப்பது தான்.

★

### சினிமா தீக்கிரை

ஊர் சுற்றும் சினிமா— ஸ்டாண்டர்டு டாக்கிஸ்— சென்ற வாரம், திருச்சூருக்கு எழுமைல் தூரத்திலுள்ள புதுக்காட்டில், காட்சி நடந்து கொண்டிருக்கும்போது தீவைக்கப்பட்டு எரிந்து சாம்பலாயிற்று. கூடாரம், பிலிம் எல்லாம் அழிந்துபோயின. கம்பெனி ஊழியர்களுக்கும்வெளியார்களுக்கும் அர்ப்பவிஷயமாக வாக்குவாதம்வந்து அது முற்றி முடிவாக அக்னி பகவான் காட்சியளித்ததாகத் தெரிகிறது. காட்சியைப்பார்த்துக்கொண்டிருந்த ஜனங்கள் ஏகோபித்து எழுந்து வெளியே ஓடினர். பெருத்த சேத மேற்பட்டிருக்குமாம்.

★

### பம்பாயில் தென்னிந்தியர் கம்பெனி

தென்னிந்திய யுனைடெட் ஆர்டிஸ்ட்ஸ் கார்ப்பொரேஷன் என்ற பெயருடன், பம்பாய் மாதுங்காவில் ஒரு கம்பெனி ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. அமச்சூர் நடிகர்களைக்கொண்டு பலவிதத் தமிழ் படங்கள் தயாரிக்கப்போகிறார்களாம்.

### உதய சங்கரின் கலாநிலையம்

நடன நிபுணர் ஸ்ரீ உதயசங்கர் தமது கலா நிலையத்தை அல்மோராவில் ஸ்தாபிக்கப்போகிறார். முதல் வருஷத்தில் 20 மாணவர்களைச் சேர்த்துக் கொள்வார்களாம். சரியான பயிர்சிக்குப் பின்பு, தம்மனோ தர்மத்தை வளர்த்து, கலையைச் சோபிக்கச்செய்யும் திறமையுள்ளோர்களையே சேர்த்துக்கொள்வார்கள்.

---

### திருவிதாங்கூரில் மதுவிலக்கு

திருவிதாங்கூர் பூராவும் மதுவிலக்கு ஆரம்பிப்பதென சமஸ்தான காங்கிரஸ் முடிவு செய்திருக்கிறது.

---

### டென்மார்க்குக்கு ஸ்ரீமதி கமலாதேவி.

டென்மார்க், கோபன் கேஹனில் அடுத்த ஜூலை மாதம் நடைபெறப் போகும் சர்வதேச ஸ்திரீ சமத்வ மகாநாட்டில், இந்தியப் பிரதிநிதியாக ஸ்ரீமதி கமலாதேவி சட்டோபாத்யாயா கலந்து கொள்வார்.

---

### மாணவனுக்கு ஆயுள்காலத் தண்டனை

பெஷவாரில், மகமத் ஸாமன் என்ற 12-வயது மாணவனுக்கும் இன்னொரு மாணவனுக்கும் ஒரு பென்ஸில் விஷயமாகத் தகராறு ஏற்பட்டதால் மகமத் ஸாமன் ஒளிந்திருந்து மற்ற மாணவனைக் கத்தி கொண்டு குத்திக் கொன்று விட்டானாம். மகமதுக்கு ஆயுள் காலத் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது.

---

### வைதீகர் கொடுமை!

#### இளவரசன் வெளியேற்றம்

காலாட் கானின் இளைய தம்பி இளவரசன் மகமத் ரஹீம் கல்விகற்ற ஒரு பெண்ணை மணந்திருக்கிறார். அப் பெண், முகமூடி யணியாம லிருப்பதால், சமஸ்தான ஸர்தார் அதை ஆட்சேபிக்கவே, ஒன்று அப் பெண்ணை விவாகரத்துச் செய்ய வேண்டும்; அல்லது சமஸ்தானத்தைவிட்டு வெளியேற வேண்டுமென்று உத்தரவிட்டிருக்கிறார். இளவரசர் ரஹீம் சமஸ்தானத்தை விட்டு வெளியேற நிச்சயித்திருக்கிறாராம். அவர், அந்த சமஸ்தானத்தைச் சேர்ந்த ஒரு ஜில்லாவுக்கு கவர்னராக இருந்தார்.











# உள்நாட்டுச் செய்திகள்

### உபாத்தியாயர்கள் சங்கம்.

(நமது நிருபர்)

திருப்பத்தூர் உபாத்தியாயர் சங்கத்தின் மாதாந்தக் கூட்டம் எரியூர் ஹெட்மாஸ்டர் தலைமையில் 7உ நடைபெற்றது. அதுசமயம் காலஞ்சென்ற மந்திரி ஸ்ரீ மேனோன் அவர்களுக்கு அனுதாபத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. போர்டு ஸ்கூல் ஹெட்மாஸ்டர் ஸ்ரீ ஏமானுயல் அவர்கள் பள்ளியின் சுத்தமும் வீட்டின் சுத்தமும் என்பதுபற்றி ஓர் சொற்பொழிவாற்றினார்கள். அதைத்தழுவி திருப்பத்தூர் தலைமை உபாத்தியாயர் சங்கா நாராயண பிள்ளை முதலியவர்கள் பேசினார்கள். திருப்பத்தூர் ரேஞ்சு டிப்டி இன்ஸ்பெக்டர் ஆசிரியர்கள் கடமைப்பற்றி ஓர் சொற்பொழிவு ஆங்கிலத்தில் ஆற்றினார்.

### தமிழர் கழகம்.

(நமது நிருபர்)

ஜனவரி 8உ காலை 10 மணிக்கு தென்மாப்பட்டு சமதர்ம செந்தமிழ் கலாசாலையில் கூடிய தமிழபிமானிகளால் ஸ்ரீமான் என். பள்ளிகொண்டான் எஸ். ஷேக் முகமத், ஆசிரியர் முருகய்யா பி. எஸ். பி. அய்யாத்துரை முதலியவர்களை முறையே தலைவர், உபதலைவர் காரியதரிசி, உபகாரியதரிசிகளாகக் கொண்டு தமிழர் கழகம் நிறுவப்பட்டது.

### பூலாங்குறிச்சி கி. கா. சபை

கிராம காங்கிரஸ் அங்கத்தினர்களின் பொதுக்கூட்டமொன்று 5-1-39 மாலை 5-30 மணிக்கு ஜில்லா போர்டு பள்ளிக் கூடத்தில் ஸ்ரீமான் வி. எஸ். ஆர். எம். வள்ளியப்பா அவர்கள் எம். யல். ஏ. தலைமையில் கூடியது. கூட்டத்திற்கு சுமார் 75 காங்கிரஸ் அங்கத்தினர்கள் விஜயம் செய்திருந்தனர். 1939ம் வருஷத்தில் புது நிர்வாகக் கமிட்டிக்கு 11 பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். தலைவர் ஸ்ரீ ராம. ப. ராம. ப. வள்ளியப்ப செட்டியார்; உபதலைவர்: வ. சொ. வள்ளியப்ப செட்டியார்; காரியதரிசி: அ. பழநியப்பா; கமிட்டி மெம்பர்கள் 8 பேர்.

### ஆவினிப்பட்டி

#### பிரிவுபசாரக் கூட்டம்

சென்ற 18 மாதங்களாக திருப்பத்தூர் ரேஞ்சு வித்தியா இலாகா அதிகாரியாயிருந்து தற்சமயம் ரஜாவில் செல்கிற ஸ்ரீ வி. இராமச்சந்திரய்யர் பி. ஏ. எல். டி. அவர்கள் ஜனவரி 3உ பிற்பகல் விவேகானந்தர் கல்விக் கழகத்தினரால் உபசரிக்கப்பெற்றார். சிற்றுண்டிக்குப் பிறகு கழகத்தலைவர் ஸ்ரீ அ. பழநியப்பச் செட்டியாரவர்களும் கழக ஆசிரியரும் ஸ்ரீ இராமச்சந்திரய்யரவர்களின் தலைசிறந்த குணங்கள் தளராமுயற்சி முதலியவற்றை எடுத்துரைத்தனர். இச்சந்தர்ப்பத்தில் அங்கு பிரசன்ன மாயிருந்த புது டிப்டி இன்ஸ்பெக்டர் ஸ்ரீ எ. தியாகராஜய்யரவர்களும் வரவேற்கப்பட்டார்.

### இராமச்சந்திரபுரம்

இவ்வூர் ஸ்ரீ பூமீஸ்வரஸ்வாமி இலவச ஹைஸ்கூலில் மூன்றாவது பழய மாணவர் தினம், நிகழும் ஜனவரி மாதம் கடைசி வாரத்தில் நடத்துவதாக சங்க நிர்வாகக் கமிட்டியார் தீர்மானித் திருக்கிறார்கள். கலாசாலையில் கல்வி பயின்ற பழய மாணவர்கள் தங்கள் நன்கொடையையும் வருஷ சந்தா ரூபாய் ஒன்றையும் காரியதரிசிக்கு அனுப்பி தங்கள் நன்றியை வெளிக்காட்ட கேட்டுக்கொள்கிறோம் என்று காரியதரிசிகள் எழுதுகின்றனர்.

### கண்டதேவி, கி. காங்கிரஸ் கமிட்டி

1939 வருஷத்திற்கு ஸ்ரீ இ. மகா. மும்முடிநாதன் தலைவராகவும், ஸ்ரீ இ. நடேச பிள்ளை உபதலைவராகவும், ஸ்ரீ ஆறுமுகம் பிள்ளை பொக்கிஷதாராகவும், ஸ்ரீ சுப. மாரியப்பா காரியதரிசியாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### உலகன்பட்டி

#### திருஞானசம்பந்த வாசகசாலை

இவ்வாசக சாலையின் சொற்பொழிவுக் கூட்டம் 5-1-39 பிற்பகல் 4-மணிக்கு திரு கா. பழநியப்பா அவர்கள் தலைமையின் பால் கூடிற்று. அது காலை இந்தி, தமிழின் சிறப்பு, குசேலரும்-வறுமையும், சுகாதாரம், கல்வி, கர்வம் என்பன பற்றி பலர் பேசினர். பின், இவ்வூர் கிராமக் காங்கிரஸ் சபைக் காரியதரிசி எம். பி. சுப்பிரமணிய ஐயரவர்களால் சென்னை அரசாங்கச் சிறை அமைச்சர் கனம் ராமன்மேனன் அவர்களின் அகால மரணத்திற்கு வாசக சாலையார் வருந்துவதாக ஒரு தீர்மானம் கொண்டுவரப்பெற்று நிறைவேறியது.

### மேல்பனையூர் கி. கா. சபை

6-1-39 மாலை 5 மணிக்கு ஸ்ரீ டி. திருமலைசுவாமி தலைமையில் கூடியது. இவ்வூர் பொது ஜனங்கள் குடி தண்ணீருக்கு கஷ்டப்படுவதால் கிணறு கட்டித் தரும்படிக்கும், பொது மக்கள் கல்வியில் முன்னேற்றமடையுமாறு போர்டு ஸ்கூல் நியமித்துத் தரும்படியாகவும், இராமநாதபுரம் ஜில்லா போர்டுக்கு எழுதியிருக்கிறதுடன், தேவகோட்டை தேசபக்தர் டைரி அருணாசலம் செட்டியார், ஷவுக்கத்அலி, துருக்கிகமால் பாஷா இவர்கள் மரணத்தைப்பற்றி இச் சபையின் சார்பாக அனுதாபம் தெரிவிப்பதாயும் தீர்மானங்கள் நிறைவேறின என்று காரியதரிசி அறிவிக்கிறார்.

### காரைக்குடி

#### சுதேசசித்த வைத்திய சங்கம்

இச் சங்கத்தின் மஹாசபைக் கூட்டம் 8—1—39உ ஞாயிற்றுக்கிழமை மாலை 6 மணிக்கு சங்கத் தலைவர் தலைமையில் கூடியது. அதில் 12-2-39உ வருஷ பூர்த்தி விழா கொண்டாட நிதி சேசர்க்கவும் இதர வேலைகளைக் கவனிக்கவும் கன்வீனர்களாக திரு ராம. அழகப்பா அவர்களையும் டாக்டர் கே. கோவிந்தராஜுலு அவர்களையும் அவர்களுடன் ஒத்துழைக்க கமிட்டி மெம்பர்களையும் தேர்ந்தெடுக்கப்பட்டது.

### பாகனேரி

பாகனேரி ஹிந்துஸ்தான் சாரண இயக்கத்தின் அபிவிருத்திக்காக இவ்வூர் நகரத்தார் அவர்களால் ரூ 501 நன்கொடையாக அளிக்கப்பட்டது. ஜனவரி 2உ இரவு இவ்வூர் சாரணர்களால் 'போலிச் சாமியார்' என்னும் நாடகம் மிக விமரிசையாக நடத்திக் காட்டப்பட்டது. அச்சமயம் திரு. மு. நா. மு. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்கள் தலைமையில் சாரணர்கள் அனைவருக்கும் சாரணச் சின்னம் வழங்கப்பட்டது.

### தேனீர் விருந்து

4உ பகல் 11 மணிக்கு பாகனேரி ஹிந்துஸ்தான் சாரண இயக்க விவேகானந்தா ட்ரூப்பின் மாஜித் தலைவர் திரு. சித. கண்ணப்பன் அவர்கள் பர்மாநாடு செல்வதன் பொருட்டு ஒரு தேனீர் விருந்தும் திரு R. V. சுவாமிநாதன் அவர்கள் தலைமையில் ஒரு கூட்டமும் நடைபெற்றன. அவ்வமயம் திருவாளர்களான, செட்டிமார் நாட்டு விகடன், T. S. மீனாக்ஷிசுந்தரம், R. டானியல் ஆகியோர் சொற்பொழிவாற்றினர். பாகனேரி ஹிந்துஸ்தான் சாரண இயக்க விவேகானந்தா ட்ரூப்பின் தலைவராக திரு செ. சுப்பிரமணியன் அவர்களை தேர்ந்தெடுக்கப்பட் டிருக்கிறது.

### விவேகானந்தர் கல்விக்கழகம்

#### ஆவினிப்பட்டி

ஜனவரி 8உ கழகத்தின் மாதக் கூட்டம் காலை மாலை இரு வேளைகளிலும், கவியரசர் ஸி சுப்பிரமணிய பாரதியாரின் சகோதரரும், மானாமதுரை ஓ. வி. வி. உயர்தரக் கலாசாலை முதல் உதவியாசிரியரும் ஆகிய ஸ்ரீ ஸி. விஸ்வநாத பாரதி B. A., L. T. அவர்கள் தலைமையின்பால் இனிது நிகழ்ந்தது. காலைக்கூட்டத்தில் மாணவ மாணவிகள், கதர், பாரதிபாடல்களைப்பற்றிய சம்பாஷணை, பழங்காலப் பெண்மணிகள், கள்ளுண்ணாமை, உண்மை மனிதன், விருந்தோம்பல், முதலிய விஷயங்கள்பற்றி அழகாகப்பேசினர். 3—30 மணிக்குப் புகைப்படம் எடுக்கப்பெற்றதும் கூட்டம் தொடங்கப்பெற்றது. அண்மையில் அகால மரணமடைந்த கோர்ட்டு சிறை இலாக்கா மந்திரி கனம் கே. இராமன் மேனன் அவர்களின் பிரிவுக்கு ஒரு அனுதாபத் தீர்மானம் நிறைவேற்றப் பட்டது. அனைவரும் மௌனமாக எழுந்து நின்று தம் அனுதாபத்தைத் தெரிவித்துக் கொண்டனர். பிறகு சிறுகூடற்பட்டி கே. குப்பான் அவர்கள் சீர்திருத்தம் என்னும் பொருள்பற்றியும், செட்டிமார்நாட்டு விகடர் எஸ். கிருஷ்ணசாமி அவர்கள் 'கலைப்பிரசாரம்' என்னும் பொருள் குறித்தும் பேசினர். தலைவர் 'கலைமகள்' பாரதியாரின் பாடல்நயங்கள் முதலியவற்றைப் பற்றி 1½மணிநேரம் மிக அழகாகவும், உருக்கமாகவும் பேசினார். சபையினரின் வேண்டுகோட்கிணங்க பாரதியார் பாடல்கள் பலவற்றை இனிசையுடன் பாடிக்காட்டினர்.

### கள்ளுக்கடை குத்தகை

#### ஒரு ரூபாய்க்கு விடப்பட்டது

தஞ்சை ஜில்லாவிலுள்ள கள்ளுக் கடைகள் சமீபத்தில் ஏலம் விடப்பட்டன. மொத்தமுள்ள 1,125 கடைகளும் ரூ. 10,74,548க்கு விடப்பட்டிருக்கின்றன. அறந்தாங்கித் தாலுகாவில் ஒரு விசேஷம். 83 கடைகளுக்கு மொத்தம் 978 ரூபாய்தான் குத்தகை. சில கடைகள் மாதம் 2 ரூபாய் மூன்று ரூபாய்க்கும் விடப்பட்டிருக்கின்றன. வளதக்காடு என்ற ஊரிலுள்ள கடை மாதம் ஒரு ரூபாய்க்கும், பட்டமங்கலத்திலுள்ளது மாதம் ஒன்றரை ரூபாய்க்கும் விடப்பட்டிருக்கின்றன.

### ஜெயங்கொண்டாநிலைக் கொலை.

(நமது நிருபர்)

திருப்பத்தூர், ஜன 5உ

நேற்று இரவு 8மணிக்கு ஜெயங்கொண்டான் நிலையில் பெரியசாமித் தேவர் என்பவரை வீரய்யா என்ற செல்லையா வேல்கம்பால்குத்தினதாகவும், மேற்படிசெல்லையாவுக்கு ஒத்தாசையாய்வந்த அடியார்அண்ணன் பெரியகருப்பன், குன்னக்குடியான் முதலியவர்களுக்கும் பெரியசாமிக் குதவியாய் வந்த கரு. வீரையா முதலியவர்களுக்கும் கைகலந்து சண்டை ஏற்பட்டு இரு தரத்தாருக்கும் காயமேற்பட்டதாகவும், தெரிகிறது. பெரியசாமித்தேவருக்கு நெஞ்சில் பலமாய் காயமேற்பட்டதால்அன்றுஇரவு மட்டும் இருந்து இறந்தார். இந்தக் கேஸ் விசாரணைக்குச்சென்றிருந்த திருப்பத்தூர் போலீஸார் சம்பந்தப்பட்டவர்களை அரஸ்டு செய்து கொண்டு வந்திருக்கிறார்கள். காயமடைந்தவர்கள் சிகிச்சைபெற்று வருகின்றனர்.

---

### சர்க்கார் ஆபிஸில் ஸ்திரீ மானேஜர்

எர்ணாக்குளம் சுகாதார இலாகா டயரக்டர் ஆபிஸில் குமாஸ்தாவாக இருந்த ஸ்ரீமதி வி. லட்சுமி அம்மா மேற்படி டயக்டர் ஆபிஸ் மானேஜராக நியமிக்கப்பட்டிருக்கிறார்.









One side page dark

Edited, Printed & Published by S. MURUGAPPA, for Dhana Vysian Company Ltd., at the Kumaran Power Press, Karaikudi. (S. INDIA)

